ஓம் பாப்பிரம்மணே நம:

80-பக்கங்கள்.

# அமிர்தகுணபோதினி

அறிவை விளக்கி, உற்சாகத்தைப் பெருக்கவல்லதான விகடமும், ஆநந்தகரமான அநுபவ விநோத ஞானகலா விலாஸங்களும் நிறைந்திலங்கும் அமிர்தச் சுவையுள்ள உயரிய மாதப் பத்திரிகை.

பத்திராசிரியர்:—திரிசிரபுரம் எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு.

"எண்ணிய எண்ணியாங் கெய்துப, எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்." (திருக்குறள்.)



| | | |
|---|---|---|
| கமலம்-6. | சென்னை பிரஜோற்பத்திஸு ஆனிமீ 1உ | இதழ் 63. |
| Vol. 6. | 1931-ம் ஸு ஜூன்மீ 14உ | No. 63. |




N22

ஆதியா யனாதியா யருந்தவப் பயன்களாய்
வேதமாய் வேதாந்தமாய் விரும்புஞான மூர்த்தியாய்ச்
சோதியாய்ச் சொரூபியாய்ச் சராசரர் வகுப்புமாய்
நீதியாய் நிறைந்துநின்ற நின்மலன் புரக்கவே.

"பகவத் தியானமே பரம ஸாதனம்" எந்தக் காரியத்துக்கும் பகவத் கிருபை இருக்க வேண்டும். தெய்வத்தியானம் மனிதர்களுக்கு அவசியம். பகவானை ஆரம்பத்தில் ஸ்மரித்தே யாவரும் தத்தம் காரியங்களைச் செய்யத் தொடங்குகின்றனர். ஈசுவரனைப் பக்தர்கள் நாநாவிதமாய்ப் பாவனைசெய்து பூஜிக்கிறார்கள். எவ்விதமாய்ப் பூஜை செய்தாலும் தயாநிதி எல்லோரையும் பரிபூர்ண கடாக்ஷத்தோடு ஆதரிக்கிறார். நாம் ஒவ்வொருவரும் அவரை மறவாமல் ஸதா தியானிக்கக்கடவோம்.

ஃ

ஓ! வாணி, வனஜாஸனராணி, பாமகல்யாணி, நவயுவதி, ஸௌந்தர்யசரீரிணீ; மிருதுமதுரபாஷிணீ, கிருபாகடாக்ஷிணீ, ஆதிபராசக்தீ, ஜயபரமேசுவரீ, ஸகஸ்ரநாமதாரிணீ, ஸந்தோஷதாயினீ, அம்பிகா, ஜகதீசுவரீ! உன் பக்தர்களைக் கிருபாகடாக்ஷத்தால் பரிபாலனை செய்வாயாக. ஜீவகோடிகளுக்கு மங்களத்தைக்

கொடுப்பாயாக. நீ இல்லாவிடில் உலகமேது? ஞானமில்லாதவன் பசுவுக்கு ஸமானன். ஏதோ பூர்வபுண்ய விசேஷத்தால் பக்தி ஏற்படுகின்றது. தீனதயாபரையான ஜகன் மாதா! உன்னருள் பூர்ணமாயிருக்கின்றது. அதனாலல்லவோ கஷ்டங்கள் அடிக்கடி ஓடியொளிகின்றன. இறக்கும் வரை உன் நாமத்தை மறவாதிருக்கும்படி கிருபை செய்தால் மனம் ஸந்தோஷ மடையும். ஸர்வ மங்களமயையான தீனரக்ஷகி! உன்னை ஸ்தோத்திரம் செய்யும் போது கண்களிலிருந்து நீர்த்துளிகள் விழுகின்றன. மனம் உருகி சரீரம் பரவசமாகிறது. பக்தி ரஸத்தை அடிக்கடி பானம் பண்ண நேர்கின்றது. இந்த வஸந்தகாலத்தில் புஷ்பத்தின் விலை அதிகம்; அதன் மணமும் அதிகம். எந்த புஷ்பத்தைக் கண்டாலும் பகவதிக்கென்று மனம் கூறுகின்றது; ஹிருதயம் அதை ஸ்தாபிக்கின்றது. மனிதர்கள் அணிந்து கொள்வதைவிட, மகா தேவிக்கு ஆபரணங்களைப் போட்டால் பார்க்க அழகாயிருக்கும். அறிவையுண்டாக்கும் அன்னையின் மகிமையை அளவிடப்போமோ? பரம கல்யாணியே! உன் பரிபூரணானுக்கிரகம் எங்களுக்குக் கிடைக்கட்டும். யாருடைய அபிமானமிருந்தும் பிரயோஜனமில்லை; தாயின் அபிமானமே சிறந்தது. அந்த அன்னையே ஜகத் ரக்ஷகியாய் ஆநந்த ஸ்வரூபிணியாய் ஸத் புத்திரர்களைப் பரிபாலிக்கப் பலவித மூர்த்தியாய் விளங்குகிறாள். அவருடைய மகிமையைச் சொல்லப் புகுந்தால் பாபம் கோபங்களெல்லாம் தீரும். தீனரக்ஷகி உன் அருளால் ஸகல துக்கங்களும் நிவாரணமாகக் கடவது.

ஃ

"தூயமறைப் பொருளைச் சுகவாரிதியமிர்தை" நெஞ்சமே ஏன் போற்றாது போகின்றாய்? பெருந் திரவியத்தை யடைந்த தரித்திரர் அத்திரவியத்தை மதிக்காமல் அதை நிந்தித்ததற்குச் சமானமாக, உருவமில்லாமலும், உருவமாகியும், நம்முடைய அருமையாகிய உயிருக்குயிராகியும், ஆகாயம் பூமி யெங்கும் இன்பமாகப் பெருகி எங்கும் நிறைந்திருக்கும் கடவுளின் கிருபா சமுத்திரத்தில் ஸ்நானஞ் செய்யாமல் வாழ்நாளை வீணாளாக நெஞ்சமே நீ ஏன் செலவழிக்கின்றாய்? தரித்திரருக்குக் கிடைத்த திரவியத்தை அவர்கள் எவ்வளவு ஆவலுடன் ஏற்றுக்கொள்வார்களோ, அவ்வளவு ஆவலுடன் எங்கும் நிறைந்திருக்கிறவரும், எல்லா நன்மையுந் தந்த கிருபா சமுத்திரமுமாகிய கடவுளை எந்நாளும் போற்றுவதல்லவோ புத்திசாலித்தனம்? இக்கருத்தைப் பின் வரும் செய்யுளிற் காண்க.

இருநிதி பெற்றதீன ரெண்ணிடா திகழ்ந்ததொப்ப
அருவமா யுருவமாய்நம் மாருயிர்க் குயிராயண்டம்
பெருகில மெங்குமின்பப் பெருக்கெடுத் தோங்கி நிற்குங்
கருணையங் கடலாடாது கழித்தனை வாழ்நாணெஞ்சே!

"வையந்தோறும் தெய்வந்தொழு." தெய்வ வணக்கத்தால் சாந்தமும் ஸந்தோஷமும் உண்டாகின்றன. ஒரு ஆழ்வார் கடவுளை நோக்கி, "ஸர்வேசுவரா! நான் புழுவாய்ப் பிறந்தாலும் வியஸனமில்லை; தொழு நோயை யனுபவித்தாலும் கெடுதலில்லை. நீர் எனக்குக் கட்டளையிடும் ஸகல காரியங்களையும் பிரியத்தோடு செய்யக் காத்திருக்கிறேன்; எனக்கு ஒரு வரம் மட்டும் தரவேண்டும்; அதாவது, நான் என்ன ஜன்மம் எடுத்தாலும் உம்முடைய பாத பத்மங்களில் மட்டும் என் ஹிருதயம் படிந்திருக்க வேண்டும்" என்று பிரார்த்திக்கிறார். இதனால் பக்தி ரஸத்தின் மேன்மை நன்றாய்த் தெரியும். கடவுளிடம் பக்தி செலுத்துவதே உத்ஸாககரம். தெய்வத்தியானத்திலுள்ள சுகம் அவரவரின் அனுபோகத்தில் செவ்வனே விளங்கும். ஃ

"சுக துக்கங்களுக்குக் காரணம் அபிமானம்" நமது குழந்தை மலவிசர்ஜனம் செய்து இடத்தை அசுத்தப்படுத்தினால் அதற்குக் கோபம் கொள்வதில்லை. அன்னியருடைய குழந்தை அவ்விதம் அசுத்தம் செய்தால் சினம் கொண்டு கண்டிக்கத் தொடங்குகிறோம். ஒருவன் தனது தாயார் ஜ்வரத்தால் அவஸ்தைப்பட்டால் அருகிலிருந்து வேண்டியதைச் செய்கிறான். வீட்டிக்குவந்த அன்னியர் ஜ்வரத்தில் விழுந்தால் இதென்ன தொல்லை, நேற்றே புறப்பட்டுப் போயிருக்கக் கூடாதா என்று எண்ணுகிறான். இவ்விதமே, தூர பந்துவுக்கு வைசூரிகண்டால் வீட்டிற்குள்ளும் அது பரவுமென்று வெளித்திண்ணையில் இருக்கும்படி செய்கிறான். தனக்குப் பெண் தந்த மாமிக்கே அந்த வைசூரி கண்டாலோ நடுவீட்டில் பஞ்சு மெத்தையிற் படுக்கவைத்து உபசாரங்கள் செய்கிறான். இவ்விதமாக ஓரிடத்தில் சுகமாயும் மற்றோரிடத்தில் துக்கமாயும் தோன்றுவதற்கு அபிமானமும், அபிமான மின்மையுமே காரணமாதலின், அவ்வபிமானத்தை விட்டொழிக்கும்படி பெரியோர் கூறுகின்றனர். அவிவேகிகளிடம் வைக்கும் அபிமானத்தை யொழிப்பது கிரகஸ்தனது கடமை. ஃ

"ஆனைக்கும் அடி சறுக்கும்" என்ற பழமொழி பொய்யல்ல. எவ்வளவு பொறுமையாயிருப்பினும் ஒவ்வொரு ஸமயத்தில் கோபமுண்டாவது மனிதரின் இயற்கை. தன்னுடைய ஸந்தோஷத்திற்குக் கெடுதலுண்டானால் கோபம் உதிக்கிறது. மனுஷ்யன் தன்னுடைய ஆநந்தத்தையே பெரிதாக மதிப்பதுதான் கோபம் ஜனிப்

---

இறக்குஞ் சமயத்திலிருந்தவர்களின் முன்னிலையில் நாம் கொடுத்த எத்தனையோ வாக்குறுதிகள் பறந்துபோய்விட்டன. இடையில் நினைத்த நமது எத்தனையோ நல்லெண்ணங்கள் தடுமாற்றமடைந்தன. இனி நாம் தவறுமல் இருப்போமென்பதும் என்ன நம்பிக்கை?

பதற்குக் காரணம். சினம் தோன்றியதும் பொறுமை யென்னும் அருமையான குணம் அற்றுப் போகிறது. இதற்காகவே விவேகி கள் தம்முடைய ஸந்தோஷத்தையோ துக்கத்தையோ பொருட் செய்யாமல் எல்லாம் ஈசன் செயல் என்று கூறி ஸாந்தமூர்த்தி களாய் விடுகின்றனர். நற்கருமத்தை மட்டும் செய்து அதன் பல னைக் கருதாமலிரு என்று பெரியோர் கூறும் வார்த்தை எத்தனை சுககரம்!

ஃ

---

"நான் போனால் அனுக்கிரகம் உண்டாகும்." இது ஒரு பெரி யாரின் மொழி. ஓர் ஸத் குருவை ஓர் சிஷ்யன் ஞானோபதேசத் தின் பொருட்டு வெகுகாலம் ஆசிரயித்துக் கொண்டுவர, குருவும் மௌனம் சாதித்தே வந்தார். இப்படியிருக்க குருவுக்கு விருத் தாப்பியம் மேலிட்டது. இதைக் கண்ட சிஷ்யன் இவர் காலஞ் சென்றால் நமக்கென்ன கதியென்று யோசித்து, "குருவே, தங்களின் பாதமலரை நம்பி வந்த எனக்கு அனுக்கிரகம் செய்யப் பிரார்த்திக் கிறேன்" என்றான். அதற்குக் குருவானவர் "நான் போனால் அனுக்கிரகம் உண்டாகும்" என்றார். இது கேட்ட சிஷ்யன் இதென்ன ஆச்சரியம் என்று சற்றே மனங் கலங்கி நிற்க, குருவான வர் கிருபாநோக்கத்தால், "நான்—என்பது மருள்; அந்த மருள் ஒழிந்தால் அருளே மிஞ்சும்" என்று தனது சூக்ஷ்ம வாக்கியத்தைச் சற்றே விரித்துரைத்து சிஷ்யனுக்கு ஞானனுக்கிரகம் செய்ததாகக் கதை யுண்டு. இக்கருத்தையே தாயுமானவர் "வல்லமையே காட்டுகின்ற மாமாயை நானொருவனில்லையே யெனி னெங்கே யிருக் கும் பராபரமே" என்று பாடிக் காட்டினார்.

ஃ

1. அலைவாய்த் துரும்பா யலையுமனப் பேயான்
நிலையான வீடடைந்து நீடூழி வாழேனோ?

2. சூரா வளிக்குளுற்ற தூசியா னனேழை
நேராக மேலெழுந்து நித்தியத்தைச் சேரேனோ?

3. கண்ணீர் குளமாய் கனதுயருக் கோறாற்றாய்
வண்மையற்ற நெஞ்சில் மகிழருவி பாயாதோ?

4. துன்பப் புவிகடலில் தோய்ந்தலைந்த கப்பலியான்
இன்பத் துறைசேர்ந் திளைப்பாறப் போவேனோ?

ஃ

---

அந்த வக்கீலை புகழ்வது எதற்காக? நீதியை ஸ்தாபித்ததற்கா? அல்லா பொய்யை தன் சாமர்த்தியத்தினால் நிஜமாக்கினதற்கா?

"வேண்டாம் வெறுப்பும் விருப்பும்" கருமம் செய்யாமலிருப்பதில் உனக்கு ஆசையானது வேண்டாம் என்று பகவத் கீதையில் சொல்லப்பட்டது. ஏனெனில், கருமம் செய்யாமலிருப்பேன் என்கிற சங்கல்பமே கருமமாகிறதாகையினால் தான். அது எப்படி எனில், கருமம் இருவகை:—(1) செய்த கருமம், (2) செய்யா தொழிந்த கருமம். நம்மை யண்டினவர்களை நம்மாலியன்றவரை காப்பாற்றுவது செய்கருமம்; காப்பாற்றாமல் விடுவது செய்யாக் கருமம். கருமத்தைச் செய்யாமலிருப்பதிலேயே—செய்யாமலிருக்கிற—ஒரு கருமத்தைச் செய்யவேண்டியிருக்கிறது. "குரங்கை நினையாதிரு" என்று கூற, திரும்பியும் அதுவே தியானம் வரும் கதைபோல், கருமத்தை நீக்கினாலும், கருமத்தை நீக்கின சங்கல்பம் வந்து சேரும். அதனால் விருப்பும் வெறுப்பும் தோன்றும். விருப்பு, வெறுப்பு எனும் இரண்டில் ஒன்று உண்டானால் மற்றொன்றும் அவசியம் உண்டாகும். அவைகளிரண்டும் நசித்தாலன்றியில் கரும பந்தம் விடாது. ஆகையால், "வேண்டாம் விருப்பும் வெறுப்பும்—அந்த வில்லங்கத்தாலே விளையும் ஜனனம்" என்று தாயுமானவர் கூறினார். கருமத்தை நீக்குவதாக வீண்சபதம் செய்வதைக் காட்டிலும் கருமத்தில் கலந்து நிற்பதே சிரேஷ்டம். ஆனால், கருமத்தின் பலனில் அபேக்ஷை மட்டும் கூடாது. அவ்வாறு அபேக்ஷையின்றிக் கருமம் செய்கிறவன் எல்லாம் செய்தாலும் ஒன்றும் செய்தவனல்ல. புளியம்பழம் ஓட்டில் எப்படியோ அப்படி அவன் கருமத்தில் இருக்கிறான். கரும வாசனை அவனை எப்படித் தொடரும்?

ஃ

"மாலை ஸ்துதி":—சர்வக்கியனாகிய எம்பெருமானே! எமது வாழ்க்கைப் பிரயாணத்தில் இன்று சாயங்காலத்துடன் மற்றொரு நாளுங் கழிந்ததன்றோ? யாம் இந்த தினத்துக்குள் எங்கெங்கு சென்றோம்; யாராரோடு ஸம்பாஷித்தோம்; என்னென்ன காரியம் செய்தோம்; ஒவ்வொரு வியவஹாரத்திலும் எவ்வகைத்தான உண்மைகளில் பயின்றோம்; எமது எண்ணங்களின் சுரூபமும், நோக்கமும் எப்படியிருந்தன? ஒவ்வொரு காரியத்திலும் திரிகாண சுத்தியாய் நடந்து கொண்டோமா? எம்மில் உதித்த ஒவ்வோருணர்ச்சியும் நேர்மையுள்ளதோ? எமது தீர்மான மெல்லாம் நியாயமானதோ? எம்மைச் சேரவந்த ஒவ்வோர் இச்சையும் பரிசுத்தமானதோ? எமது கருத்து ஒவ்வொன்றும் கிரமமான துதானோ? எமது மொழி

வீட்டுத்தலைவன் வீட்டிலுள்ளவர்களுக்கு ஒரு கட்டளையிடுவானானால் அந்தக் கட்டளையின் உறுதியை என்றும் அவன் காப்பாற்றவேண்டும். தன் வார்த்தை என்றைக்கும் கண்டிதமான ஒரே வார்த்தைதானென்று அவன் பலப்படுத்திக்கொள்வதைப் பொறுத்து மற்றவர்கள் அவனுக்கு அடங்கி நடப்பதுமிருக்கும். பெண்கள் மயக்கில் சிக்கி இன்றொரு வார்த்தை, நாளையொரு வார்த்தையாக மாறினால் அதற்கு ஒருபோதுமே மதிப்பேற்படமாட்டாது.

ஒவ்வொன்றும் சத்தியமானதோ? எமது செய்கை ஒவ்வொன்றிலும் எமது கடமைக்கேற்ற விசுவாசத்தோடு நடந்து கொண்டோமோ? எமதப்பனே! அவற்றை யெல்லாம் நீயல்லவோ அறிவாய். அவையுள்ளபடி நின் திருவுள்ளத்துக்கு இசையாதனவாயின், எம்மை மன்னித்து இனி அங்ஙனம் புரியாதிருக்க அறிவு தந்தருள்வாய். எமது ஆன்மாக்களின் பொருட்டும், எமது ஸகோதரர்களின் பொருட்டும் யாம் செலுத்த வேண்டிய கடமைகளுக்கேற்க யாம் ஆத்ம விசாரம் செய்வோமாக. எங்கும் எப்பொழுதும் நின்னை விசுவஸித்தே யொழுகுவோமாக. எங்களால் நின் கட்டளையை அதிக்கிரமிக்காமல் செலுத்தும்படி அதற்குத் தகுந்த ஞானத்தையும் கடைப்பிடியையும் மனமுவந்து தந்தருள்வாயாக. ஓம்தத்ஸத்.

## மரியாதை வேறு, அன்னியோன்னியம் வேறு.

பரஸ்பரம் மரியாதை காண்பித்துக்கொள்ளுதல் ஸர்வ ஸாதாரணம். அவர் மரியாதை செய்கிறார். அதற்குப் பதிலாக இவர் மரியாதை காண்பிக்கிறார். அவ்வளவுடன் அது முடிந்துவிடுகிறது. தம்மைச் சேர்ந்தவர் இறந்ததாக ஒருவர் கார்டு எழுதுகிறார். இது பந்து மரியாதைக்காக வரைந்ததாகும். அதற்கு உடனே மற்றவர் மிகவும் துக்கிப்பதாக அநுதாபக்கடிதம் எழுதியனுப்பிவிடுகிறார். இது பதிலுக்குப் பதில் செய்த மரியாதையாகும். இந்த மரியாதையில் உப்புமில்லை, சக்கரையுமில்லை, பற்றுதலுமில்லை. ஆனால், அன்னியோன்னியமோ அது வேறு விஷயம். மிகவும் பெரிய காரியம். மரியாதை உபசாரத்துடன் அது முடிந்துவிடாது. இருவரின் மனமும் ஒன்றுபட்டுக் கிடக்கும் சங்கதி. அங்கு மரியாதைக்கு மதிப்பு காட்டப்படுவதுமில்லை. பரஸ்பர அன்னியோன்னியம் உயிருடன் கலந்து நிற்பதாதலின், எந்த இழிவான வேலையைச் செய்ய ஏவினும் சந்தோஷமாக அதற்கு இணங்கிவிடும். அன்னியோன்னியமுள்ளவர்களுக்கு வெறும் கார்டு எழுதமாட்டார்கள். தந்தியே தருவார்கள். அதற்கு உபசாரக்கடிதம் எழுதியனுப்பாமல் அந்த நிமிஷமே கதறிக்கொண்டு புறப்பட்டுவிடுவர். சில சமயங்களில் மரணத்துக்கு முன்பே கடிதம் வந்து அருகில் இருப்பதற்காகப் புறப்பட்டுப் போய்விடுவதுமுண்டு. ஆகவே, அன்னியோன்னியத்துக்குள்ள கௌரவமும், பற்றுதலும், உண்மையான அன்பின் பெருக்கும் ஒப்புக்குச் செய்துகொள்ளும் போலிமரியாதைக்கு ஏற்படமாட்டா.

# அமிர்தகுணபோதினி

பிரஜோற்பத்தி வரு ஆனிமீ 1உ


## அதிர்ஷ்டம் வரும் வழி.

"க்கிக் கொட்ட யாராலிருக்கிறது; எங்கேயாவது தொலைகிறதுதானே" என்று மிக்க இழிவாகக் கேவலப்படுத்தப்பட்டவர்களுக்குங்கூட அதிர்ஷ்டம் வந்து நிலைமை உயருங் காலம் ஒன்றிருக்கிறது. எவ்வளவோ தாழ்த்தப்பட்டு அல்ப ஊழியர்களாய் அமர்ந்திருந்தோர் அதே கடைக்குத் தலைவராகவோ, அதைப்போலொத்த மற்றொரு கடையை ஏற்படுத்திக்கொண்டு முந்திய எஜமானனுடன் சரிசமானமாகிவிடவோ அதிர்ஷ்ட காலம் நேர்ந்து கொள்வதுமுண்டு. ஆறு ரூபாய் சம்பளத்திலிருந்தவன் அறுபதினாயிரம் ரூபாய்க்குச் சொத்தாளியாகி விடுவதும் அதிர்ஷ்டத்தின் செயலே. அதிர்ஷ்டத்துக்கு எதிர்நோக்கி யாரே ஆவலாதி கொள்ளாதார்? அதிர்ஷ்டம் வரும் வரும் என்று நினைத்து இறக்குங் காலந்தன்னிலும் அச்சிந்தனையை மறவாதார் எத்துணையோ பேர். எதிர்பார்த்தவர்கட்கு அதிர்ஷ்டம் வராமல், அந்த அதிர்ஷ்டத்தையே கனவிலும் எண்ணாதார்க்கு அந்த அதிர்ஷ்டம் திடீரெனச் சூழ்ந்துகொள்வதையும் ஆங்காங்கு காண்கின்றோம். மரித்த பின்பு சவக்குழியில் அதிர்ஷ்ட தேவதை சந்திப்பதும் விசித்திரமே. மிக்க வறிஞனாய்த் தான் வாங்கிய லாட்டரிச் சீட்டு ஒன்றினைக் கிழிந்தும் அழுக்குப் படிந்துமுள்ள தனது சட்டைப்பையில் போட்டு வைத்தவனொருவன் அந்தத் தரித்திரத்தோடேயே இறந்து, அந்த சட்டையோடும் அடக்கம் செய்யப்பட்டபின், அவனுக்கே அந்த லாட்டரிச்சீட்டின் முதற் பரிசான ஐந்துலக்ஷம் ரூபாய் கிடைக்க, அந்தச் சீட்டின் எண் தெரிந்த அவனது நண்பனால் விஷயம் வெளியாகித் துரைத்தனத்தாரின் அநுமதியின் பேரில் சவக்குழியைத் தோண்டியெடுத்து அந்தச் சட்டைப் பையிலிருந்த சீட்டு கண்டு பிடிக்கப்

---

அமாவாசைபோன்ற முக்கியமான விரதநாட்களில் திடீரென்று வீட்டுப் பெண்கள் மாதவிலக்காய் விடுகின்றனர். தனிக்குடித்தனமாயுள்ள வீடுகளில் ஆடவரின் பாடு திண்டாட்டமாகிறது. இது தனிக்குடித்தனத்தின் அழகு!

பட்டு, அவ்வறிஞனின் மக்களுக்கு அப்பெருந்தொகை சேர்ப்பிக்கப் பட்டதும் உண்மையில் நிகழ்ந்த வர்த்தமானந் தான்.

ஃ

இவ்விதம் வரும் அதிர்ஷ்டம் பின் நிலைக்காமல் போய்விடுவது பலருக்கு; என்றுமே நிலைத்து விடுவது சிலருக்கு. வறுமையை நன்கு அனுபவித்தவர்களுக்குத் திடீரென்று அதிர்ஷ்டம் சூழ்கின்றது. கூட்டாகச் சேர்ந்து வியாபாரம் தொடங்குகின்றனர். வெகு விரைவில் பிரபல வியாபாரிகளாகின்றனர். இதன்பின் இந்தக் கூட்டுக்குள்ளாகவே கலகம் நேர, வியாஜ்யம் தொடங்க, தேடிய பொருள்யாவும் இதில் விரயமாகி வழக்கும் தோற்றுவிட, இதிலிருந்து வியாபாரமும் நின்று, வந்த அதிர்ஷ்டமும் மறைந்து விடுகின்றது. மாற்றாந்தாயின் கொடுமை அதிகமாகி, வெகு கேவலமாய் மூலையிற் கிடந்தவனுக்குத் தந்தையின் முயற்சியால் ஒரு லக்ஷாதிபதியின் பெண்ணை மணக்கும் அதிர்ஷ்டம் வாய்த்து உயர்ந்த நிலைக்குச் சென்று விடுகின்றான். இத்தகையோனுடைய அதிர்ஷ்டம் இன்னும் பெருகிச் செல்ல வொண்ணாதா? அவ்வளவு சொத்திருந்தும் அந்தப் பெண் மலடியாகிவிட மேலுக்கு விருத்தியின்றிப் போகின்றது. அந்தப் பெண் ஜீவித்துள்ளவரை இவனுக்கு அங்கு புசிப்பு கிடைக்கும். இவனுக்கு முன் அப்பெண் போய்விடிலோ வெறுங்கையனாய்த் தந்தையின் வீடுவந்து சேருகிறான்.

ஃ

தனது பாக சொத்துக்களை மற்ற ஸகோதரர்கள் அபகரித்துக் கொள்ள, மிக்க எளியனாய் இவனுக்குக் கலியாணம் ஏது, பெண் தருவாரேது என்று கிடைக்கும் ஒருவனுக்கு மறுதினம் அதிர்ஷ்ட தேவதையின் ஆசிவருகிறது. பிரபல கனவானொருவர் தமது புத்திரிக்கு மணமகன் பார்த்த இடத்தில் பெரிய மனஸ்தாபங்கள் நேர, வைத்த முகூர்த்தம் தவறுதிருப்பதற்காக அப்பெண்ணை இவனுக்கே வலியத்தந்து விவாகத்தை நடத்தி விடுகின்றார். இவனும் மாமனார் வீடுசேர்ந்து மகா சௌக்கியத்தில் இருக்கிறான். பின் அதிர்ஷ்டம் மறைய, மனைவியும் மாள, பழய தரித்திர நிலைக்குத் திரும்பி தரித்திரனாகவே இறக்கின்றான்.

ஃ

சிறுவயதிலேயே விவாகம் கூடுகின்றது. உத்தியோகமும் கிடைக்கின்றது. செல்வமும் பெருகுகின்றது. மக்களும் உதிக்கின்றனர். மகா பாக்கிய வாழ்வுதான். பின் நேருவதென்ன? உத்தியோகம் தொலைந்துவிட, மனைவி மரிக்க, மக்களும் ஒருவர் பின்

---

கடவுளில்லையா, நீதியில்லையா என்று புலம்புகிறார்கள். கடவுளையும் நீதியையும் அந்த சமயம் காண்பது அரிதாகத்தான் இருக்கிறது.

ஞெருவராய் முடிந்துவிட, எல்லாம் ஒழிந்து ஒண்டி மரமாகி விடுகின்றான். ஏராளமான ஐசுவரியங்கட்கு அதிபதியாய், பெரிய கல்விமானாய், தன் அதிகாரமே எங்கும் செல்வதாய் உள்ள ஒருவன் பின்னர் யாவற்றையும் இழந்து ஒரு சிறு குடிசையில் வாழ்வோனாகி இறக்க, அவனது அந்தியச் செலவுக்கு வீட்டில் ஒரு காசு தானுமின்றி மற்றவர் செய்யும்படியாகி விடுகின்றது. ஏழ்மை நிலையிற் கிடந்த பெண்ணுக்கு அதிர்ஷ்டதிசை வாய்த்துத் தனவானை மணந்து விசேஷ பூஷணாதிகளுடன் விளங்குகின்றாள். மக்கள் பாக்கியமும் உண்டாகின்றது. அவ்வளவுதான் அதிர்ஷ்ட காலம்! திடீரென்று கணவன் சாக, ஸர்வ சொத்துக்களும் கடன்காரரும் தாயாதிகளும் கொள்ளை கொள்ள, பழயவறுமை நிலைக்கு வந்துவிடுகிறாள். குமஸ்தாவாயிருந்த ஒருவன் தனது எஜமானனின் வியாபாரஸ்தலத்துக்கே சொந்தக்காரனாகி பலமாடி வீடுகளுடன் வாழ்கின்றான். பின்னர் வியாபாரம் குறைந்து, கடன் பெருகி யாவற்றையும் விற்றுவிட்டுக் கண்காணாத நாட்டிற்கு ஓடி விடவும் தலைவிதி நேர்கின்றது.

ஃ

ஸகல பாக்கியங்களும் இருக்க ஆயுட் பாக்கியமில்லாத ஆடவர் மகளிரின் தொகை சொல்லப்போமோ? எண்ணற்ற நிதிக்குவியல்களின் அதிபதியாகும் அதிர்ஷ்டமிருந்தும் ஈன்ற அன்னையை இளமையிலேயே இழந்த சிறுமையே பெரியதாய் விடுகின்றது. உயர்ந்த உத்யோகத்திற்கு வந்து மூன்றாவது மாதத்தில் விவாகமும் கூட இருக்கின்ற தருணம் அந்தோ ஒரு விபத்தின் வசமாகி ஆவி பிரிகின்றான். இன்னொருக்கு வந்த அதிர்ஷ்டம் வந்தவழியே போய் விடுகின்றது பத்தாயிரத்துச் சொத்தாளி; ஆனால், தீராப்பிணியாளி; விவாகமுமில்லை; விருத்தியுமில்லை. ஒண்டிக் கட்டையாகவே ஆயுளை முடிக்கவேண்டும். சொத்தின் அதிர்ஷ்டம் இருந்தென்ன பயனோ? குடும்பத்தில் தானே மூத்தகுமாரனாயிருந்தும், ஏவல் செய்யப் பலர் சூழ்ந்து நின்றும், வெகுகாலம் வரை விவாகமே இல்லாதிருந்து அப்படியே கடவுளிடம் போய் விடுகிறான். அதிர்ஷ்டமிருந்து என்செய்ய? அனுபவிக்கப் பிராப்தமில்லையே!

ஃ

எவரெவர் சொத்துக்களுக்குப் பாத்தியஸ்தராய்த் தோன்றக் கூடுமோ அவர்களெல்லாம் தன் எண்ணப்படி மாண்டுமடிய, ஸகல சொத்துக்களும் தனக்கே ஸ்வாதீனமாக; அங்கே மக்கள் பாக்கியத்தைக் காணோம். அதற்குப் பரிகாரமாக ஸ்வீகாரம் எடுத்துக் கொண்டு திருப்தி படப்போக, அந்த ஸ்வீகார குமாரனும் அவன்

---

அச்சமும் அதைரியமும் ஆண்மகனுக்கு அழகல்ல. உலக முழுதுமே எதிர்த்தால்தானென்ன? நிமிர்ந்த தலையைத் தாழ்த்தவொண்ணாது.

பெற்றோரும் பிறகு தனக்கு எதிரிகளாகிவிட, தானும் அவர்களை வெறுத்துவிட,என்ன வெறுப்பினும், பிறகு அந்த ஸ்வீகார புத்திரனுக்கே தனது ஸர்வ சொத்துக்களும் சேர்வதாயிருப்பதை நினைத்து வாடி வருந்தி ஏங்க நேர்கின்றது. ஏராளமான செல்வம் கிடைத்த அதிர்ஷ்டத்தின் முடிவு என்ன? மனோ சமாதான சந்தோஷமும், குடும்ப விர்த்தியும், திருப்தியும் காணக்கிடைக்கவில்லையே!

ஃ

எண்ணாத பெரும்பதவியும், கௌரவ உத்தியோகமும் வாய்த்து வெகுமேலான நிலைக்கு உயர்ந்து விட்டுத் திடீரென யாவும் இழந்து, இருக்கும் நகைகளை விற்றுப் புசிக்கவேண்டிய காலமும் வருகின்றது. இதை ஒரு அதிர்ஷ்ட மென்பதா? தன் குமாரத்திக்கு உயர்ந்த இடத்தில் விவாகம் கூடிவிட, தானும் தன் குமாரனுமாக அங்குபோய்ச் சேர்ந்துகொண்டு வெகு கண்யமாய் வாழ்கின்ற அதிர்ஷ்டமும் சிலருக்கு நேர்கின்றது. அதன் பின்முடிவோ, தன் பெண் இறந்துவிட, அதிலிருந்து தனக்கு அந்த இடமும் அன்னிய வீடாகித் தானும் தன் குமாரனும் தன் ஊர்வந்து சேர, வந்த இடத்தில் குமாரனும் மடிய ஒண்டிக் கட்டையாகித் திகைக்கின்றாள். பல குழந்தைகளுக்குத் தாயாகிப் புத்திரவதியாய் விளங்கியது ஒரு காலத்தின் அதிர்ஷ்டமாக, மற்றொரு காலத்திலோ எல்லா மக்களும் தன் கண்முன்பே மாண்டு தான் தனியே தவிக்கும்படி யாகிறது. நாலைந்து குழந்தைகள் தனக்கு இருந்தும் எவரும் ஆதரிப்பாரின்றிக் கைவிடத் தான் அநாதையாய்க் காலங் கழிக்க ஸம்பவிக்கின்றது. மக்களைப் பெற்ற அதிர்ஷ்டம் இவ்விதமாக முடிகின்றது.

ஃ

தினக்கு எவ்விதக் கவலையுமின்றித் தந்தையின் கீழ் குழந்தையாய் எல்லா பாக்கியமும் பெற்றுக் கவலைபற்றுவாழும் அதிர்ஷ்டம் சித்தித்த ஒருவன். அந்த தந்தைக்குப்பின் வீடு நிலம் யாவற்றையும் இழந்து ஊரையே விட்டு வேற்றூர் சென்றுவிட நேர்கின்றது. உத்தியோகத்தில் ஏராளமான சொத்துகள் சேர்த்துத் தம் மக்களுக்கு வைத்து விட்டுச் செல்ல, துரதிர்ஷ்டசாலிகளான அவன் மக்களோ பல காரணங்களால் அந்த செல்வத்தை இழந்து அகதிக ளாகின்றனர். எவ்வளவோ வியாபார நிர்வாகத் திறன் தனக்கிருந்தும், தான் தொட்ட தெல்லாம் விருத்தியாகாது நஷ்டமாகிப் பிறரிடத்தில் சம்பளத்திற்கு அமர்ந்து காலம் தள்ள நேர்கின்றது. வியாபாரத்திறன்

---

"இன்பமான வெயில்" என்கிறார் குடைபிடித்துப் பாதரக்ஷையுடன் செல்லுமொருவர். மற்றவர்கள் வெயிலில் துடிப்பதை அவர் கண்டாரா? மூளையில் ஏறுவதும் ஏது? தானே பட்டால்தானே தெரியும்?

பெற்ற அதிர்ஷ்டம் இவ்விதம் சுருங்கி விடுகிறது. பிறந்த வீட்டிலும் அதிர்ஷ்டசாலியாகிப் புகுந்த வீட்டிலும் ஸர்வாபரண பூஷிதையாய் விளங்கிநின்றாலும், பிறக்கும் குழந்தைகளெல்லாம் பெண்ணேயாகி, ஒரு ஆண்மகவின்றி அங்கலாய்ப்பு கொள்ள வருகின்றது. அதிர்ஷ்டத்தில் இது ஒருவகை. விவாக மானதும் வெகு சீக்கிரத்தில் இருகுழந்தைகளுக்கும் தாயாகி விடுகிற அதிர்ஷ்டம் கிடைத்து விடுகிறது. பிறகு, அவ்விரு குழந்தைகளும் சிறு பிராயத்திலேயே மாள, பின்னர் புத்திர சந்தானமே இல்லாதுபோய் விடுகிறது. முதலில் பாக்கியத்தைக் காண்பித்துப் பிறகு காலமுற்றிலும் கண்ணீர் விடவைக்கும் இந்த அதிர்ஷ்டத்தை என்னென்பதோ?

ஃ

இனி, இன்னொருவித விநோதமான கண்ணாடி அதிர்ஷ்டமிருக்கிறது. கண்ணாடியில் ஒன்றை நாம் காண்கிறோம். ஆனால் அதைப் பிடிக்க முடிகிறதேயில்லை. கண்ணால் பார்க்கலாம்; ஆனால், பிடித்து அனுபவிக்க முடியாது. அவ்விதமே, சம்பளக்காரனாயிருந்தவனுக்கு எஜமானனுடைய ஸர்வ சொத்துகளுக்கும் அதிபதியாகிவிட அதிர்ஷ்டம் வாய்க்கின்றது. நாளைக்கு அந்த உயர்பதவியைத்தான் அடைய விருக்கும் சமயத்தில், அது மற்றொருவன் கைவசமாகி ஏமாறிவிட நேர்கின்றது. தமயன் இறக்க, அவனது ஸகல ஆஸ்திகளும் தனக்கேயாகி விடுகிற அதிர்ஷ்டம் வருகிறது. ஆனால், தமயன் மனைவியோ கோர்ட்டுக்குச் சென்று ஸகல சொத்துகளையும் அவளே அடையத் தீர்ப்பு பெற்றுவிட, தான் திகைக்க நேர்கிறது. பாட்டனார் சொத்து, குழந்தையில்லாத அத்தையின் சொத்து, தந்தையின் செல்வம் யாவும் ஒருவனுக்கே கிடைத்துச் சீமானாகும் அதிர்ஷ்டம் வருகிறது. முடிவிலோ அந்தந்த சொத்துக்களுக்கு ஒவ்வொருவர் தோன்றி அவரவர்கள் வசமாகிவிட, தந்தையும் ஏழ்மையாக, தனக்கு ஒன்றுமே கிடைக்காமற் போய்விடுகின்றது சில உத்தியோகஸ்தர்களுக்கு அவர்கள் இறந்து அதற்காகப் பந்துக்கள் சூழ்ந்து புலம்பிநிற்கையில் அவர்களுடைய 300 ரூபாய் சம்பளம் 500-ரூபாய்க்கு உயர்த்தப்பட்டு மேல் பதவிக்கு மாற்றப் பட்டிருப்பதாய் உத்தரவு வருகின்றது. இந்த அதிர்ஷ்டம் வந்து பயனென்னவோ? மனைவியும் புது உத்தியோகமும் கூடி மேலான நிலைக்கு வரும் அதிர்ஷ்டம் உண்டாக, மனைவியும் கர்ப்பிணியாக, மிக்க ஆநந்தத்துடன் இருக்கையில் ஒரு சுரம் வந்து கடவுளிடம் போய் விடுகின்றான். வர இருந்த உயர்ந்த அதிர்ஷ்டம் சிதறிவிடுகின்றது.

ஃ

நிலைக்காமற்போய் விடுவதும், ஏமாறி ஏங்க நேர்வதுமான அதிர்ஷ்டங்கள் இவ்வாறாக, சிலருக்கு வந்த அதிர்ஷ்டம் என்றுமே

நிலைத்து விடுகிறது; மேன்மேல் ஓங்கியும் செல்கின்றது. எளிய நிலையிலிருந்தவர்கள் ஏராளமான செல்வங்களை அனுபவித்துக் கொண்டு, மண்ணைத் தொட்டாலும் பொன்னாகி, எடுத்த காரியங்கள் யாவற்றிலும் வெற்றியேகொண்டு பிரக்யாதியுடன் வாழ்கின்றார்கள். இன்னும் சிலர் நிலைத்த அதிர்ஷ்டசாலிகளாகவே யிருந்து பெருமை தாங்கிடினும், ஸதாகாலமும் தொல்லை வாய்ப்பட்டு, உண்ணவும் உடுக்கவும் நேரம் கிடைக்காமல் பல கவலைகளுடனேயே காலம் தள்ளுகிறார்கள். ஆனால், ஐசுவரிய ஸம்பன்னர்களாக விளங்குவதில் மட்டும் குறைவில்லை. எனினும், கவலை வாழ்வாக உள்ளது. வேறுசிலர் பிறந்த நாள் முதல் அந்தியம் வரையும் ஓரே எளியஸ்திதியில் செல்வாக்குடனேயேயுள்ள அதிர்ஷ்டசாலிகளாய்த் தோன்றுகின்றனர். அவர்கள் எவ்வளவு உயர நினைப்பினும் பகவான் அதற்கு இடம் தராமல் ஓரே குறித்த அளவுக்கு மட்டுமே அவர்களை அதிர்ஷ்டசாலிகளாக்கி, அந்த அதிர்ஷ்டத்தை அவர்களுக்கு உறுதி செய்தும் வைக்கிறார். மற்றும் சிலர் பிறப்பிலேயே அதிர்ஷ்டசாலிகளா யிருந்து, இடையில் ஸகல ஐசுவரியங்களும் இழக்க நேர்ந்து அகதிகளாயினும், சொற்ப காலத்திற்குள் யாவும் கூடிவரப் பெற்று, மறுபடியும் உயர்ந்து எப்போதும் பணியாட்கள் தம்மைச் சூழ்ந்து நிற்க உன்னதப் படுவோரா யுள்ளார். இங்ஙனமாக, (1) அதிர்ஷ்டம் வந்து விலகி விடுவதும், (2) அதிர்ஷ்டம் வருவதற்கிருந்து கைக்கெட்டியது வாய்க்கெட்டாமலாகி ஏமாறி விடுவதும், (3) அதிர்ஷ்டம் வந்து என்றைக்கும் அது நிலைத்து விடுகிறதுமான மூன்று பிரிவுகள் கொண்டனவாய் விளங்குகின்றன. அதிர்ஷ்டத்தின் சங்கதிகள் எவ்வாறாயிருப்பினும் அதைக்கடவுளின் செயலில் ஒப்புவித்து விட்டு, எந்தவிதத்திலும் ஒரு காலத்தில் முன்னுக்குவரக்கூடுமென்ற நம்பிக்கையுடன் உற்சாகத்தோடும் ஓயாது தொழில் செய்யக்கடவோம். இறைவன் நமக்கு அருளியதில் திருப்திகொண்டு, இன்னும் அருளுவாரென நம்பி சலியா முயற்சியுடன் விளங்கக்கடவோம். நமது பசிக்கு உணவளிக்க நல்லிறைவன் இருக்கையிலே, நாம் எதிர்நோக்கும் அவ்வுணவை நமக்கு இறைவன் மனமுவந்து தர நமது சலியா நன்முயற்சி இருக்கையிலே, நாம் ஆவலுடன் எதிர்நோக்கும் நல்ல அதிர்ஷ்டமானது நமக்கு வாரா தொழியினு மென்ன; நலம்பெருக வந்தாலுமென்ன; அது எவ்வாறாயினும் ஆகுக; அதை நாம் பொருட்செய்யாமல் நன்னெறியின் வழியில் நடப்பதையே முக்கியமாய்க் கவனித்து, நமது தொழிலாகிய கடமையைத் தொடர்ந்து செய்துகொண்டு செல்வதிலே திருப்தி பெறக்கடவோம். இதுவே இன்றைய நமது வேலை. நமது வேலையை ஆசீர்வதித்து வெற்றி தருவது எல்லாம்வல்ல கடவுளின் வேலை.

---

# தைரியசாலியான போர்வீரன்



அமெரிக்கா சண்டத்தைச் சேர்ந்த ஒரு நகரில் சில பழய சிப்பாய்கள் தங்கள் காலத்தில் நடந்திருந்த ஒரு யுத்தத்தைப்பற்றிப் பேசுகையில், அதில் பராக்கிரமத்தையும் தைரியத்தையும் யார் காட்டினார்களென்ற கேள்வி பிறந்தது. ஒருவன் அதற்கு விடையாக அடியில் வருமாறு சொல்லுகிறான்.

ஃ

"அந்த யுத்தத்தில் எதிரிகள் குண்டடி தாளமாட்டாமல் பள்ளங்களைத் தோண்டி அதற்குள் மறைந்து கொண்டு அங்கிருந்தபடியே வெடிகளைப் போட்டனர். சத்துரு பக்ஷத்தாரில் அநேகர் இறந்துபோயினர். காயமடைந்து எழுந்திருக்க முடியாபவிருந்த ஒரு சுபேதார் தாகத்தால் அதிக கஷ்டமடைந்து ஜலம் கொண்டுவந்து கொடுப்பவர் யாருமில்லையா என்று கல் நெஞ்சும் கரையும்படி கதறிக்கொண்டிருந்தான். அவனுக்குச் சிறிது தூரத்திலுள்ள பள்ளத்தில் ஒளிந்திருக்கும் சிபாய்களிலொருவன் இளம் பருவமுடையோன். அவனோ அனுபவசாலியுமன்று. ஆனால், சமயம் வந்தால் யாருக்கும் ஸகாயம் செய்யும் நற்குணமுடையவன். அந்தப் பரிதாபகரமான சப்தம் இவன் காதில் விழுந்தது. இவன் ஸைந்யத்தில் சேர்ந்து கொஞ்ச காலந்தான் ஆயிற்று. ஆகிலும் அவன் தன் நேயர்களைப் பார்த்து, "அப்பா! இனி நான் இக்கதறுதலைக்கேட்டு ஸகிக்கமாட்டேன்; என் பங்குக்குரிய ஜலத்தை அவனுக்குக் கொடுத்து வருகிறேன்" என்றான். நேசர்களோ, "அடே பைத்தியக்காரா! உன் தலையை வெளியில் நீட்டினால் அதைக் குண்டுகள் சல்லடைக் கண்கள்போல் துளைத்துவிடும்; இதோ பார் என்று ஒரு குல்லாவை எடுத்துப் பள்ளத்தின்மேல் தூக்கினார்கள். அந்த க்ஷணத்தில் 15-குண்டுகள் வெகு ஸப்தத்தோடும் வந்து குல்லாவைத் துளைத்துச் சென்றன. இதைப் பார்த்த யௌவன புருஷன் லக்ஷியம் செய்யாமல் உபகாரம் செய்வதிலேயே மனம்கொண்டு பள்ளத்திலிருந்தெழுந்து மெள்ளப் படுத்தமாதிரியாகவே மார்பால் நகர்ந்துகொண்டு போனான். குண்டுகள் மழையைப்போல் வருஷிக்கின்றன. வழிமுழுதும் போகக்கூடாமல் தடுக்கப்பட்டிருக்கிறது. சுபேதாரிடம் இவன் செல்ல ஸாத்தியப்படாததால் பெரிய குச்சியில் ஜல பாத்திரத்தைக் கட்டி சாகப்போகிறவனிடம் நீட்டினான். சுபேதாருடைய நன்றியறிவை என்னவென்று சொல்வோம்! ஜலம் கொடுத்த உபகாரியை இன்னானென்றறியாவிட்டாலும், தன்னிடமிருந்த விலையுயர்ந்த கெடியாரத்தை அதே குச்சியில் மறுபடி அவனிடம் நீட்ட, அந்த சிப்பாய் அதைப் பெற உடன்படாமல் மறுத்துவிட்டுப் பின் திரும்பிப் பள்ளத்தில் போய்க் குதித்தான். இவனுடைய காரியத்தைக் கூடவிருந்தவர்கள் கண்ணுற்று ஆச்சரியமடைந்து, "அப்பா! உனக்கு இந்தத் தைரியம் எங்கிருந்து வந்தது?" என்று வினவ, அவன் "என் தாய்

---

வீரகுணம் படைத்த தோழா! இறைவனையே நம்பிய நேயா! சுதந்தரத்தை மதிப்பாரிடமே சுதந்திரதேவியும் சுமுகத்தோடும் வாஸம்புரிவாளென்பதை நின்னிடமே கண்டேன்.

எனக்குக் கற்றுக்கொடுத்த ஒரு வார்த்தை நினைவுக்கு வந்தது; என்ன செய்தாலும் அதை மறக்க முடியவில்லை; "தாகத்தோடு வருந்தினேன், எனக்கு ஜலம் கொண்டுவந்து கொடுத்தார்கள்" என்று பைபிலில் சொல்லியிருக்கும் அந்த வார்த்தை சுபேதாருடைய ஆர்த்த ஸ்வரத்தைக் கேட்கும்போது என்னைக் கட்டாயப் படுத்தியது; அதனால் நான் பொறுக்க முடியாமல் மரணத்திற்கும் துணிந்து அவனிடம் சென்றே"னென்றுவிடையளித்தான். இவனன்றோ பரோபகாரி! இவனன்றோ தைரியசாலி!!

தன்னை முற்றிலும் மறந்துவிட்டதாக நினைத்து மனது கசந்துபோய் வாடியிருக்கும் நிலையில் அந்த நண்பனே தன் வீட்டுக்கு வலிய வந்து நுழைந்துவிட்டால், ஆச்சரியத்தினால் பிரமித்துப் போகிறான். உங்கள் கால்கள் இந்த வீட்டிற்கும் திரும்பிற்றா வென்று பரவசப்பட்டு விடுகிறான். பழைய நட்பையும் கடிதங்களையும் மறுபடி தொடங்கிக்கொள்கின்றான்.

## வஞ்சித்து வாழ்ந்தார் யார் வையக மீது?

ஒருவன் தனக்கு வழிகாட்டுகிறவரையில் கனத்த உபசாரமும் அதிக சம்பளமும் தந்து வைத்திருந்து, அவன் வழிகளைக் கற்றுத் தெரிந்துகொண்டபின் மெதுவாக அவனை விலக்கிவிட்டுத் தாங்களே அந்த வியாபாரத்தை நடத்திக்கொள்ள ஆரம்பித்துவிடுகிறார்கள். இவர்களுக்காக எவ்வளவோ பாடுபட்டவன் இடையே ஏமாறி இந்த விசுவாசத் துரோகிகளைச் சபிக்கிறான். இவர்களும் அவன் கண்ணெதிரே வெகு மேலான வாழ்க்கைக்கு உயர்ந்து சென்று அவன் முன்பாக மீசை முறுக்குகின்றனர். இவ்விதம் சிலநாட்கள் நாடகம் நடந்தும் பிறகு திடீரென்று முறிந்து ஸர்வநாசமாகின்றனர். வஞ்சகத்தில் விர்த்தியில்லை. முடிவில் நாசம் நிச்சயமே.

நாடகத்திலேயே இருந்து நடிப்பவர் சிலர். வேறு தொழில்களில் இருந்துகொண்டு குறித்த ஒவ்வோர் சமயங்களில் வந்து ஓர் இரவு நடித்துப் போவோர் சிலர். அவ்விதமே பொதுஜன மேடைமீதும் சிலர் ஓர்சமயம் ஏறுவதும் காண்கின்றோம்.

சில்லரைக்கடன்களை வாங்கி நாணயமாகத் திருப்பிவிட்டு பெருத்த தொகையுடன் கம்பி நீட்டிவிடுவதுபோல், சின்னசமாசாரங்களில் உண்மை பேசி, பெரிய சங்கதியில் "திடீர்புளுகு" ஒன்று கூறி ஏமாற்றிவிடுவோர் சிலர் உண்டு.

# கடவுளை நம்பினோர் கைவிடப்படார்.



சில வருஷங்களுக்கு முன் இங்கிலாந்தில் ஒரு சீமாட்டி ஒரு கிராமத்துக்குப் புறப்படுகையில், அவளுடைய வேலைக்காரி ஏதோ தெய்வ ஏவுதலால் தூண்டப்பட்டு அளவுக்கு மீறிய ஆகார பதார்த்தங்களை தன் எஜமானிக்குத் தெரியாமல் வண்டியில் ஏற்றித் தானும் பிரயாணமானாள். வழியில் குதிரைகள் அதிக பளுவால் தத்தளித்தன. சீமாட்டி வண்டியைச் சோதிக்கையில் அளவுக்கு மீறிய ஆகார பதார்த்தங்கள் ஏற்றியிருப்பதைக் கண்டாள். உடனே வேலைக்காரி பணிவுடன் தனக்கு உண்டான சொப்பனத்திற் கண்டபடி இன்ன இடத்திலிருக்கும் ஏழைக்குக் கொடுப்பதற்காகத் தனது பணத்தைச் செலவிட்டு அந்த ஆகார பதார்த்தங்களை வாங்கியதாகக் கூறினாள். சீமாட்டியும் அவளுடைய தர்ம குணத்துக்கு வியந்து தானும் அவள் போகும் இடத்திற்குவருவதாகக் கூற, வேலைக்காரியும் சந்தோஷத்துடன் சம்மதித்தாள். ஃ

கிராமத்தை அடைந்தவுடன் வேலைக்காரி அவ்வாகார பதார்த்தங்களை எடுத்துக்கொண்டு சீமாட்டியுடன் தெருவில் நாலைந்து வீடுகள் தாண்டி ஓர்வீட்டிற்குள் நுழைந்தாள். அதுவே தான் கனவிற் கண்ட வீடாக அவளுக்குத் தோன்றிற்று. அங்கு கிழிந்த ஆடை யணிந்திருந்த ஓர் ஸ்திரீ தன் இருகரங்களையும் கூப்பிக் கடவுளை நோக்கிப் பிரார்த்தித்துக் கொண்டிருந்ததைக் கண்டாள். அவளுடைய பிரார்த்தனை முடியும் வரையில் காத்திருந்து தான் கொணர்ந்த ஆகார பதார்த்தங்களை அவ்வேழைமாதிடம் ஒப்படைத்தாள். பரமஏழையான அந்த ஸ்திரீக்கு அப்பொழுது உண்டான ஸந்தோஷத்திற்கும் நன்றி விசுவாசத்திற்கும் அளவில்லை. தனக்கு ஆகார பதார்த்தங்களை அளித்த வேலைக்காரியை நோக்கி "அம்மா! என் கணவர் வியாதியினால் அதிகநாள் பீடிக்கப்பட்டு, கடைசியில் இறந்துவிட்டார். அவர் சிகிச்சையின் நிமித்தம் என்னுடைய எல்லாப் பொருளையும் தத்தம் செய்தேன். என் தேகத்திலுள்ள ரத்த மாமிஸங்களையும் கூட அவர் ஸேவையில் அர்ப்பணம் செய்து, இப்பொழுது எலும்பும் தோலுமாய் இருக்கிறேன். ஆகார பதார்த்தங்கள் யாவும் செலவழிந்துவிட்டன. இன்றையதினம் உபவாசம் இருக்கும்படியான நிலை ஏற்பட்டுவிட்டது. கடவுளைநோக்கி, 'பிதாவே, இன்றைக்கு நான் ஆகாரமில்லாமல் மடியவேண்டும்; அல்லது அனாதைகள் ஆச்ரமத்தில் சேரவேண்டும்; இவைகள் உமக்கிஷ்ட மில்லாவிடின் எனக்கு அன்னமளித்து இன்று என் உயிரைக் காப்பீராக' என்று கண்ணும் கண்ணீருமாகப் பிரார்த்தனை செய்தேன். பரம பிதாவானவர் இந்த ஏழையின் பிரார்த்தனையை ஏற்று வேண்டிய அளவு ஆகார பதார்த்தங்களை அளித்திருக்கிறார். ஆஹா! என்னே அவருடைய காருண்யம்" என்று சொல்லலானாள். வேலைக்காரி

---

எவ்வளவு தரித்திரதிசையிலுங்கூட இயற்கை தனது வேலையை நடத்திக்கொண்டேதானிருக்கும். அது ஒருபக்கம் வேலைசெய்ய, தரித்திரம் மற்றொரு பக்கம் துன்புறுத்திச் சோதனைகள் காட்டும்.

யும் தான் கண்ட கனவு உண்மையாய் முடிந்ததை யறிந்து வியப்புற்றான்.

ஃ

கடவுளின் தயையினிடத்தில் இவ் வேழைப் பெண்மணிக்கு எவ்வளவு விசுவாசம் பாருங்கள். இப்படிப்பட்ட உண்மையான விசுவாஸமே மாந்தர் களை ஸகல கஷ்டங்களையும் தாங்கி ஜீவிக்கும்படி செய்கிறது. கடவு ளுடைய தயாள குணத்தில் நம்பிக்கை உண்டாக்க முடியாத சாஸ்திரங்களும் சாஸ்திர ஆராய்ச்சிகளும் எதற்காக? கடவுளின் கருணையில் திடமான விசு வாசம் கொண்டவர்களே உத்தம மாந் தர்களாவர்.

G. குரு காமாக்ஷி அம்மாள்.

வெளியூரி லிருப்பவன் தன் ஊருக்குப் புறப்படுகிறவனிடம் பணத்தைக் கொடுத்துத் தன் வீட்டில் தரும்படி வேண்டி அனுப்புகிறான். பிறகோ, அவன் எப்போது வீட்டில் தருவானோ என்னவோ, அதைவிட நேராக மணியாடர் செய்திருந்தால் நன்றாயிருக்குமே, இந்த நினைவு அப்பொழுது வராமற் போயிற் றேஎன்று வாடுகிறான். ஊர்போ னவன் பணத்தை சீக்கிரம் வீட் டில் கொடுப்பதுமில்லை. எது வும் பட்டபிறகே தெரிகிறது.

## புத்திரசோகக் கொடுமை.

ஒருவர் தமது அருகில் படுத்திருந்த பக்கத்து வீட்டுக் குழந்தைக்கு ஓயாது விசிறியபடி யிருந்தார். எவரேனும் அப்பக்கம்வரின் தமக்கே விசிறிக்கொள்வதுபோல் நடித்துப் பிறகு அக்குழந்தைக்கே விசுறுவதானார். இச்சமயம் அக் குழந்தையின் தாய் அங்கு வந்து அதை எழுப்பி அழைத் துச்செல்ல முயன்றாள். விசுறுவது குழந்தைக்கே யென் றும், சிலதினங்களுக்குமுன் காலமான தம் குழந்தையே அருகில் படுத்திருப்பதுபோல் எண்ணி விசுறுகிறாரென்றும் அத்தாயின் மனதிற்படவே, ஐயோ பாவம் என்று துக்கித் தவளாய்க் குழந்தையை எழுப்பாது மௌனமாகச் சென்று விட்டாள். விசுறுபவரோ மிக்க மகிழ்வுடன் முன்னைவிட அதிகமாய் விசுறுவதானார். புத்திரசோகம் பொல்லாது.

---

கதரின் மேன்மையையும், பெருமையையும் அபாரமாய் விஸ்தரித் எழுதி யுள்ள ஒரு ஆசிரியரை காணச்சென்ற காலத்து அவர் அன்னிய ஆடையுடன் அலங்காரமாய் விளங்கினர். இது காலத்தைப் பார்த்துப் பிழைக்கும் வழியல் லாது வேறு என்னவோ? பல பிழைப்புகளில் கதர் பிழைப்பும் ஒன்றாய் விட்டது!

## சைதாபுரம்
# காசி விஸ்வநாத முதலியார்



ஸ்ரீமான் காசி விஸ்வநாத முதலியார் 1806—ம் வருஷத்தில் பிறந்தவர். சென்னை முதலான இடங்களில் கல்வி கற்று முதலில் "டிரேன்ஸ்லேட்" டாரனார். பிறகு உடுமலைப்பேட்டை "டிஸ்டிரிக்ட் முனிசீப்" ஆகி, 1866—ம் ஞூ ஆகஸ்டு மாதத்தில் ஸர்க்கார் வேலையை விட்டு விட்டு மாதம் ஒன்றுக்கு 95½-ரூபாய் உபகாரச் சம்பளம் பெற்றுக் கொண்டு சென்னைக்குத் திரும்பினார். ஃ

அக்காலத்தில், இராஜாராம் மோகனராயின் பிரம ஸமாஜத்தைத் தழுவிச் சென்னையில் 7-4-1864—ம் வருஷ முதல் ஏற்பட்டிருந்த வேத ஸமாஜம் என்ற சபையும், அதற்குத் துணையாக 7-5-1864—ம் வருஷ முதற் கொண்டு நடை பெற்று வந்த "தத்துவ போதினி" என்ற தமிழ் மாதப் பத்திரிகையும் மிகவும் சீர் கேடான நிலைமையில் இருந்தது. அதை முதலியாரவர்கள் கை கொடுத்து உதவி நல்ல நிலைமைக்குக் கொண்டு வந்தார்.

ஃ

பிறகு 15-8-1870—ம் வருஷத்தில் சென்னை தங்கசாலைத் தெருவில் தமது வீட்டில் பிரம்ம "ஸமாஜம்" என்ற பெயரால் ஒரு ஸமாஜம் ஸ்தாபித்தார். "தத்துவபோதினி" நின்று போக, அதற்குப் பதிலாக "பிரம்ம தீபிகை" என்ற மாத ஸஞ்சிகையைப் பற்றி 26-12-1870—ம் வருஷம் ஒரு விளம்பரம் வெளியிட்டு, அதன் படியே பத்திரிகையையும் பிரசுரம் செய்தார். பிரம்ம ஸமாஜமும், பிரம்மதீபிகையும் வெகு பிரபலமாயிருந்தது. இந்த சந்தர்ப்பத்தில்தான் பிரம்ம பிரார்த்தனைப் புஸ்தகங்களும், "பிரம்ம ஸமாஜ நாடக" மும் இயற்றி வெளியிட்டார். "பிரம்மஸமாஜ நாடகம்" சுமார் 400-பக்கங்கள் கொண்ட மகா மேன்மையான நூல். மேலும், புனர் விவாக தீபிகை, தாசில்தார் நாடகம், டம்பாச்சாரி நாடகம் முதலிய பல புஸ்தகங்களையும் வெளியிட்டிருக்கின்றார். ஃ

விக்கிரகாராதனை கூடாதென்பதும், விதவா விவாகம் செய்ய வேண்டுமென்பதும் இவரது அபிப்பிராயம். இவரது நூல்கள் யாவும் மிக்க எளிய நடையில் அமைந்துள்ளவை. பாடல்களும் அவ்விதமே வெகு சுலபமானவை. தமது மனஸாக்ஷிக்கு விரோத மின்றி நடந்த பெரியோராவர். கடைசியாக, இவர் தமது 65-வது பிராயமாகிய 1871-ம் வருஷம் அக்டோபர் மாதம் 14-ம் தேதி வெள்ளிக்கிழமையன்று பரந்தாமன் திருவடி நீழலெய்தினர். பண்டைக்காலத்துப் பிரபல கிரந்த கர்த்தர்களிலே இவரு மொருவராவர். இவரது நூல்களிலே "டம்பாச்சாரி நாடகம்" மட்டும் இப்பொழுது விலைக்குக் கிடைக்கிறது. அது படிக்கத் தகுந்த விவேக விளக்க ஹாஸ்ய நூல்.

# நோயாளிகளும் மருந்துகளும்.



நோய் கண்டவர்கள் மருந்தை உட்கொள்ள வேண்டிய தவசியமே. அதற்காக அவர்கள் நல்ல வைத்தியனைத் தேடி அனுபோகசாலிகளின் ஆலோசனையைக் கேட்டுப் பின்னர் மருந்தை வாங்கி உட்கொள்ள வேண்டும். அப்படிச் செய்யாமல் பத்திரிகைகளில் பிரசுரமாகும் விளம்பர மருந்துகளை வி. பி. முதலிய தபாற் செலவுகள் உட்படக் கிரயம் கொடுத்து வாங்கித் தலைவலி போகத் திருவலி வந்தது போல் வேறு பல வியாதிகளை வரவழைத்துக் கொள்ளுகிறார்கள்.

ஃ

இக்காலத்தில் அங்கங்கே சிலர் ஜீவனோபாயத்துக்கு மார்க்க மின்றி போலி மருந்துகளைச் செய்து அதற்கு அழகிய பெயர்களைக்கொடுத்து, தளுக்கான காகிதத்தில் உத்தமர்களால் எழுதப்பட்டுள்ள விளம்பரங்களைத் தாங்கள் எழுதியது போல் அச்சிட்டு ஸாதுசீலர்களுக்கு அனுப்புகின்றனர். விஷத்தைத் தந்தாலும் நம்பி உட்கொள்ளுகிற வைத்திய விஷயத்தில் மோசம் செய்வது மகா பாவம்.

ஃ

பஸ்பங்களில் தாமிர பஸ்பம் மிகவும் கொடியது. அதில் குணம் உண்டானாலும், தக்கபடி சுத்தி செய்தால் அது நன்மை தரும். இல்லையாகில் குடலைப் புண்ணாக்கி அழுகச் செய்து பச்சைப் பல்லாக்கில் படுக்க வைத்து விடும். திரிச்சிராப்பள்ளியில் தாசில்தாராக இருந்த ஒரு கனவானும் அவரது நண்பரும் தாமிர பஸ்பத்தையுண்டு குடல் வெந்து ரத்தம் ரத்தமாய் வாந்தி எடுத்து தாசில்தார் 15—ம் நாளில் பரலோகப் பிராப்தியாக, அவரது நண்பர் அதற்கு மறுவாரம் விண்ணுலகெய்தினர். இப்படியே எவ்வளவோ திருஷ்டாந்தங்கள் கூறலாம். ஒரு அமிர்தாஞ்சனம் தோன்ற, இப்பொழுது 108—அஞ்சனங்கள் புறப்பட்டிருக்கின்றன.

ஃ

பற்பொடி என்பவைகளெல்லாம் மோசமே. நமது நேயர்களுக்குப் பற்பொடி செய்யும் எத்தனையோ முறைகளில் சுலபமான ஒன்றை இங்கே குறிப்பிடுவோம். பாதாமி ஒட்டை அடுப்பில் சுட்டு அது நன்றாய்க் கருகினதும் பொடி செய்து அதில் ஒரு பைசா படிக்காரமும், மூன்று பைசா கற்பூரமும், மூன்று பைசா காசுக்கட்டியும் சேர்க்க வேண்டும். வாஸனை அதிகம் வேண்டுமானால் ஏலம், கிராம்பு, ஜாதிக்காய் முதலியவற்றைச் சேர்த்துக் கொள்ளலாம். இது பற்களைக் கெட்டிப் படுத்தும். உமியை வறுத்து அத்துடன் சோற்றுப்பும் சிறிது சேர்த்துக் கொண்டு பல் துலக்கலாம். அத்துடன் கடுக்காயும் சிறிது சேர்த்துக்

---

எந்த முயற்சிக்குமே தைரியமற்ற இருதயத்தில் தைரியம் புகுத்தி வழி காட்ட ஒருவர் தேவை. அங்ஙனம் வழிகாட்டுபவர் மனைவியாகவோ—தாயாகவோ இருந்துவிட்டால்—அதற்கு அதிக விசை உண்டாகிவிடும்.

கொள்ளலாம். சிலர் சீமைச் சுண்ணும்பால் பற்பொடி செய்வதுண்டு. அது பார்வைக்கு அழகே யொழிய பற்களுக்குக் கெட்டியல்ல. சுண்ணும்பின் குணத்தை நமது நாட்டார் நன்ருயறிவர். ஆகையால் சுண்ணும்புப் பற்பொடிகளிலும் விற்பனைப் பற்பொடிகளிலும் இச்சை கொள்ளாமல் தாங்களே சொந்தத்தில் செய்து கொள்வது நன்மை. கருவேலம் பட்டைத் தூளுடன் சிறிது படிக்காரமும் கற்பூரமும் சேர்த்துக் கொண்டால் திவ்யமான பற்பொடியாகும். இன்னென்றும் சொல்ல நினைக்கிரேம், அதையும் கூறி விடுவது நன்மை. தாம்பூல மாத்திரைகளை வாங்குவதைவிட நாமே செய்து கொள்வது நன்மை. ஜாதிக்காய் ஜாதிபத்திரி ஏலம் கிராம்பு முதலிய வாஸனைத் திரவியங்களை பன்னீரில் அரைத்து சிறிது பச்சைக் கற்பூரமும் சேர்த்து சிறிய உருண்டைகளாக்கி வெயிலில் உலர்த்தி சீசாவில் வைத்துக் கொண்டால் மிகவும் பிரயோஜனமாகும் ஃ

நாம் நேரிற்கண்ட ஸமாசாரத்தை இங்கு வெளியிடுகிரேம். கேசங்கள் வளரும் தைலத்தை ஒருவர் வாங்கி உபயோகித்தார். அவருடைய பணம் செலவாயிற்றே யொழிய கூந்தல் வளர்ந்தோங்க வில்லை. எட்டு புட்டி வரையில் உபயோகித்தும் எவ்வித குணமும் தோன்ருததால், பிறகு நாம் அதைப் பரிசோதிக்கையில் ஸாதாரண நல்லெண்ணெயில் வாஸனைத் திரவியம் கொஞ்சம் கலந்திருந்தது. ஃ

வைத்தியர்களிலும் குட்டிவைத்தியர்கள் பலர் இருக்கிருர்கள். ஒரு ஊரில் ஒரு வைத்தியன் எருக்கன் வேரைச் சுத்தி செய்யாதபடி அரைத்துத் திரட்டி பேதியாக வேண்டுமென்றவருக்குத் தந்து, அதற்கு மாற்று தெரியாமல் பயமில்லை யென்று சொல்லிக் கொண்டே யிருந்தான். மருந்தை யுட் கொண்டவன் கண்களை மூடினன். மறுபடி திறக்கவேயில்லை. மற்றும் ரஸம் கலந்த மருந்தை யுண்டு வாய் வெந்து பற்கள் உதிர்ந்து ஆயுள் முழுவதும் பொக்கைவாயர்களாகின்றனர். அதிகமாய் மருந்துகளைத் தின்பது ஆரோக்கியத்துக்குக் கேடு. நல்ல காற்றும், நல்ல உணவும், நல்ல ஸ்தலமும் இருந்தால் அவற்ருலேயே அநேக வியாதிகள் பரிகாரமாகும். புத்திமான் வியாதி வரவொட்டாமல் தடுத்துக் கொண்டிருப்பான். ஆயினும், அனுரோக்கிய முண்டானபிறகு அதை மருந்தால் தீர்ப்பது அவசியமே. எனினும், பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்த கதை போல் வியாதியைப் பரிகரிக்க முயன்று தீயமருந்துகளை யுண்டு மரணத்தை யடைவது மதியீனம். ஃ

நிற்க, நோயில்லாதவர்களும் கூட நோய் வந்ததாகப் பிரமை கொண்டு புட்டி புட்டியாய் மருந்துகளை வாங்கி யுட் கொள்ளுகிருர்கள். வெறுந் தண்ணீரை ஒரு சீசாவில் கொட்டி ஏதேனும் வர்ணப் பொடியைத் தூவி அதன் நிறத்தை மாற்றிக் கார்க்கால் அடைத்து, அம்மருந்து அமெரிக்காவிலிருந்தும்வந்தஆரோக்கியஎண்ணெய் என்றும், ஹிமாசலத்தில் ஒரு யோகீசுவரர் சொல்லிக் கொடுத்த முறைப்படி தயார் செய்த பச்சிலைக் கஷாயமென்றும் கூறி, அதை யுண்டு பாலும் நெய்யும் சாப்பிட்டால் தேகம் புஷ்டியாமென்றும் சொன்னுல், அவ்வார்த்தையை உண்மை யென்று நம்பி விலை கொடுத்து வாங்கி மோசம் போகும் ஸாதுக்கள் எத்தனை பேர்! அதை விட

மனச்சோர்வு கொண்டவனை எதிர்ப்பதும், மனேவுறுதி படைத்தவனை வணங்கி உட்பட்டுவிடுவதும் ஞாலத்தாரின் இயல்பு.

காவேரி ஜலத்தை ஒரு பைஸா கூடச் செலவின்றி வேண்டிய மட்டும் அள்ளிக் குடிக்கலாம். அதற்கு வி.பி.யில்லை. வி. பி. தபாற் செலவுகளில்லை. கார்க்கில்லை. புட்டி கிரயமுமில்லை. ஏமாற வேண்டிய அவசியமுமில்லை.

இவ்வுலகத்தில் அநேக உத்தமர்கள் யோக்கியமாய் வியாபாரம் செய்து லாபமடைகின்றனர். அவர்களைப் பற்றி நாம் எதும் குறைகூறவில்லை. ரோஜா புஷ்பத்தினடியில் முட்களிருப்பது போல் உத்தமர்களின் மத்தியில் போலிகளாயுள்ளவர்கள் தங்கள் புகழ்ச்சியை வெகு ஆடம்பரமாய் வெளியிடுகின்றனர். பத்திரிகைகளில் ஒரு பக்கம் முழுதும் விளம்பரம் செய்யப்படுவதாலேயே அதை நம்பி விடலாகாது. ஏதோ ஒரு மூலையில் சிறிய விளம்பரம் செய்யப் பட்டிருப்பதாலேயே அந்த ஔஷதத்தை அல்பமானதாகவும் எண்ணப்போகாது. ஔஷதங்கள் பிரஸித்தி பெற்றவைகளா, அவற்றைச் செய்வோர் உத்தம புமான்களா, லோகப் பிரக்யாதி வகித்த சிரேஷ்டர்களா—என்பதை ஆராய்வது முக்கியமே யன்றி, சிறிய விளம்பரம், பெரிய பிரகடனம் என்பதின் பேரில் ஒன்றை நிதானிப்பது தவறாகும்.

ஆசாரக்காரர்கள் ஏறியிருக்கும் வண்டியில் ஏறுவது வெகு தொல்லை. நாம் மேலே பட்டு விடாதபடி அவர்கள் எட்டி ஒதுங்குகிற ஒவ்வொரு சமயமும் நம்மை ஈட்டியால் குத்துவது போலிருக்கிறது. இவ்வளவு ஆசாரம் காண்பித்துக் கொண்டு வாய் நிறையப் புகையிலையை அடக்கிக் கொள்ளுகிற ஆபாஸம் வேறே. இவ்விதமே தேகம் பெருத்தவர்கள் உள்ள வண்டியில் ஏறினால் நமக்கு இடமே கிடைக்காது. மேலும் நம்மீது சாய்வதும் வேறே! நாம் அவர்களுக்கு திண்டு தலையணைகளாக வேண்டியும் வரும்.

## லைப் இன்ஷியூரன்ஸ் எச்சரிக்கை.

வைத்திய பரிசோதனை யில்லாமல் 60—வயதுள்ளவர்கள்வரை சேரலாமென்றும், ஆயிரம் ரூபாய்போல் லாபம் அடையலா மென்றும் சொல்லிப் பல இன்ஷியூன்ரஸ் கம்பெனிகள் கிளம்பி யிருக்கின்றன. இவற்றில் சேருவதைப் பற்றித் தீரயோசித்துச் செய்யுங்கள். இதில் நாளை மறைந்து விடக்கூடிய இன்ஷியூரன்ஸ் கம்பெனியும் சில இருக்கலாம். 1900—வருஷத்தில் இப்படியே மரணபண்டு, கல்யாண பண்டு என்று பல தோன்றி ஒரு ரூபாய் செலுத்துவோருக்கு 500-ரூபாய்வரை லாபம் கிடைக்குமென்று ஏமாற்றி எத்தனையோ பேர்களின் வாயில் மண்ணைப் போட்டு விட்டன. அப்படியே இவற்றிலும் சில இருக்கலாம். உஷார்!




(136-ம் பக்கத் தொடர்ச்சி.)

675. A word is medicine to the wise.

நற்புத்தி யுள்ளோருக்கு ஒரு வார்த்தை மருந்து போலாம்.

676. One word to the good man, one stroke to the good bullock.

நல்லோருக்கு ஒரு வார்த்தை, நல்ல மாட்டுக்கு ஒரு அடி.

677. There is no limit to avarice.

பேராசை என்னும் பிசாசிற்கு ஒரு எல்லையும் கிடையாது.

678. Rain drops make the ocean. Trifles ought not to be neglected.

மழைத்துளிகள் சேரினும் ஒரு கடலாகும், துரும்பையும் ஒன்றுக்கு உதவாது என்று தள்ளக் கூடாது.

679. Aspire not to that which you are not fit.

உன்னால் அடையக் கூடாத பதவிகளை அடைய முயற்சியாதே.

680. That which is near is not valued.

சமீபத்திலிருப்பதின் மகிமை நாம் அறிவதில்லை.

681. Trust in a dog and you are never betrayed.

ஒரு நாயை நம்பு. அது உன்னை ஏமாற வைக்காதிருக்கும்.

682. There is a link between money and life.

பணத்திற்கும் உயிருக்கும் ஒரு சங்கிலி இருக்கிறது.

683. The elephant is an elephant whether on high ground or low.

ஒரு யானை தாழ்ந்த நிலையிலும் மேன்மையான நிலையிலும் ஒரு யானையே. அது போல் சிறந்த பெரியோர்களும்.

684. When honour has gone, why life?

மதிப்பு போய்விட்டால் பின் என் வாழ்நாள் கழிப்பது?

685. Fools prophecy others fates but know not their own.

மூடர்கள் பிறரைப்பற்றிப் பேசுவர்; தங்கள் சங்கதிகளை அறியார்.

686. Men who do good to others will have good done to them.

பிறருக்கு நற் காரியங்கள் செய்யும் மனிதர்களுக்கு நன்மை தானாகவே வரும்.

687. Jealousy brings punishment in its train.

---

காலையிலேயே வீட்டில் கலகம் தொடங்கிக்கொள்வதில் அன்றைய பொழுதும், அன்றைய புசிப்பும் விஷமாகி மிக்க துக்கமாய்விடுகிறது.

பொறுமை தன்னுடன் கேட்டை யும் அழைத்துக் கொண்டு வருகிறது.

688. Men will not remain, but words, will last.

மனிதர்கள் இறந்து போயினும், அவர்கள் கூறிய வார்த்தைகள் நிலவு கின்றன.

689. Nothing lasts to eternity but good deeds.

நற்காரியங்களைத் தவிர மற்றவை எக்காலும் இருப்பதில்லை.

690. Treachery recoils on those who are guilty of it.

பிறரை ஏமாற்றுவோர் மற்றோரால் ஏமாற்றப்படுவர்.

691. If an ass joins an ass, both jump up and kick each other.

ஒரு கழுதை மற்றொரு கழுதை யுடன் சேரின் குதித்து உதைத்து ஒன்றை ஒன்று தள்ளும். அதுபோல் மூடரும்.

962. A thief lays his own snare.

திருடன் தனக்குத் தானே, சிக்க வலை ஏற்படுத்திக் கொள்கிறான்.

693. Don't reckon your eggs before they are laid.

முட்டை இடுவதற்கு முன் அவை களை எண்ணாதே.

694. Injustice knows no bounds.

அநீதிக்கு எல்லையே கிடையாது.

S. ஸ்ரீரங்கராஜு,
'ஜெகந்நாதபாக்.'

## எது கேவலமோ அதுவே முக்கியம்.

மலம் எத்தனையோ அஸங்கித வஸ்து. ஆனால், மலம் தான் தேகத்துக்குப் பலம். தங்கி நிற்கும் மலமும், தேகத்தை விட்டு வெளியில் வரும் மலமும் சரியான நிலை யில் இருந்தால்தான் ஆரோக்கியம் நிலைக்கும். மலப் போக்கு ஏற்பட்டு அதில் தேகத்தின் சதை முற்றும் கரைந்து எலும்புக்கூடாகி மரணமுற்றோர் அநந்தம். எழு தத்தெரியாமல் கேவலப்பட்டுள்ள இடதுகை சமயத்துக்கு உதவிசெய்யும் அரிய துணைவனாகும். மிக்க அஸங்கிதமான இடங்களே ஜனன ஸ்தானங்களாகின்றன. கேவலமான ஜீவியத்திலுள்ளோரால்தான் உலகத்தின் பெரும்பகுதியான வேலைகள் நிறைவேறுகின்றன. இன்று நம் கண்முன்பு கேவல மாய்த் தோற்றும் சிறுவன்தான் நாளை பெரிய மனிதனாக ஆகிறான். கேவலம் என்று எதையும் இகழாமல் அதிலுள்ள தத்துவங்களையும் ரகசியங்களையும் ஊகித்தல் வேண்டும்.






இன்று கூடிய நமது கடையில் ஏழு வருஷங்கள் தீவாந்தர சிக்ஷை யடைந்து விடுதலை பெற்றுத் திரும்பிய பொன்னுச்சி கிட்டு தமது விவாக சுகத்தைப்பற்றிப் பேசினார். "என் மனைவி தாய் வீட்டிலிருந்து அதிக ஆஸ்தி கொண்டு வரவில்லை யென்று என் தாயும் தந்தையும் அடிக்கடி திட்டி ஹிம்ஸித்து அவள் மீது ஸதா என்னிடம் கோள் கூறிக்கொண்டே யிருந்தனர். அவள் சமைத்த அன்னத்தை இவர்கள் புசிப்பதேயில்லை. என் தாய் தனியாகச் சமையல் செய்து கொள்ளத் தொடங்கிவிட்டாள். இதைப் பார்க்க என் மனது புண்ணானது. மனைவியின்மீதோ எவ்வித தப்பிதமும் சொல்லுவதற்கில்லை. அவள் தகப்பனார் வியாபாரத்தில் நஷ்ட மடைந்து கடன் ஜெயிலில் இருந்து வந்தார். இந்த நிலையில் அவள் அதிக சொத்து கொண்டுவரவில்லை யென்று தொந்தரை செய்வது பாவமாக எனக்குத் தோன்றிற்று. ஆகவே, நான் அந்தரங்கத்தில் என் மனைவியிடம் அன்புள்ளவனாகவே இருந்தேன். அவளும் என்னிடத்தில் உண்மையான விசுவாஸமுள்ளவளாக நடந்து கொண்டாள். என் தந்தை தாயாரிடமும் அப்படியே அவள் பணிந்து நடந்தாளெனினும், துவேஷமுள்ள நெஞ்சு அதை ஒரு பாசாங்காகவே எண்ணிற்று. நான் என் தாய் தந்தையரின் வார்த்தைக்குக் கட்டுப்பட்டவனாய் அதிகமாய்க் கலகத் தீ மூற்றும் போதெல்லாம் அவளைத் தாய் வீட்டுக்கு ஓட்டிவிடுவதும், பிறகு சில நாள் பொறுத்து அழைத்துவருவதுமா யிருந்தேன். ஒரு நாள் என் பெற்றோர்கள் என் மனைவி எவனோடோ சென்றுவிட்டு வீட்டுக்குத் திரும்பினாளென்றும் அவள் நடத்தை சரியில்லை யென்றும், அவள் வீட்டிலேயே இருக்கக் கூடாதென்றும் பெருஞ் சண்டை பிடித்தார்கள். என் மனைவி உத்தமி என்பதை நான் அறிவேனாதலால் மனம் ஸஹியாமல் ஒரு துப்பாக்கியை எடுத்து என்னை நானே சுட்டுக்கொள்ளப் போனேன்; இதை யறிந்த என் மனைவி ஓடி வந்து, ஸ்வாமி, முதலில் என்னைக் கொன்ற பிறகு, தாங்கள் இறந்து போகலாம் என்று என் கையைப் பிடித்துக் கொண்டாள். அதற்குள் என் அப்பன் ஓடி வந்து என்னை நோக்கி, "அடே! நீ எனக்குப் பிறந்தது நிஜமானால் இவளை இப்போதே சுட்டுக் கொல்" என்றார். எனக்கு அதிக ஆத்திரம் உண்டாயிற்று. என் அறிவையே நான் இழந்துபோனேன். மறு நிமிஷம் என் மனைவியின் மீது என் துப்பாக்கியிலிருந்து குண்டு பாய்ந்து அவளைஎமபுரம் அனுப்பிற்று. நானும் ஒரே ஓட்டமாய் ஓடிக் கிணற்றில் விழுந்து விட்டேன். அப்படியே என் பிராணன் தொலையக் கூடாதா? அருகே யிருந்த சிலர் உடனே என்னைக் கிணற்றிலிருந்தும் எடுத்து வெளியேற்றினார்கள். பின்னர் போலீஸார் என்னைக் கைது செய்து கொலைக் குற்றஞ் சாட்டினர். செஷன்ஸ் ஜட்ஜ் என்னை விசாரித்து மரண தண்டனை விதித்தார். என்

மாமனார் வீட்டார் எனக்காக அப்பீல் செய்யவே, இரண்டு ஜட்ஜிகள் வழக்கினுடைய சாராம்ஸங்களை யறிந்து எனது மரண தண்டனையை மாற்றி ஏழு வருஷம் கடுஞ் சிறை விதித்தார். உலகத்தில் கொலைக்குப் பல காரணங்களிருப்பினும் என்னுடைய இந்த சங்கதி பரிதபிக்கத் தக்கது. நான் ஏழு வருஷ சிறை வாஸத்தை யனுபவித்து விட்டு இப்பொழுது திரும்பியிருக்கிறேன். இதுவே என் விவாக சுகம்'' என்று கூறினார்.

ஃ

அல்லாபிச்சை எழுந்து, உங்கள் தாய் தந்தையரைப் போய்ப் பார்த்தீர்களா என்று கேட்டார். அதற்குப் பொன்னுச்சிமிட்டு, "இனி அவர்களை நான் பார்க்கவும் வேண்டாம். அவர்கள் இனி எனக்கும் பெண் தேடி மணமுடிக்கவும் வேண்டாம். நானாக் என் மனைவியைக் கொலை செய்யவில்லை யென்பது என் மாமனார் வீட்டுக்குத் தெரியுமானதால், என் மனைவியின் தங்கையை எனக்குக் கொடுக்க எற்பாடு செய்திருக்கிறார்கள். எனக்குப் பிழைத்துக் கொள்ள வழி தெரியும். ஒருவரின் கைச் சோற்றுக்கு நான் எதிர்பார்ப்பவனல்ல. இனி எனக்கு மனைவியாக வருகிறவளாவது மாமன் மாமி கொடுமையின்றி வாழட்டுமென்று விவாகம் முடிந்ததும் நான் வெளியூருக்குப் போய் அங்கேயே நிலைத்து வசிக்கப் போகிறேன்'' என்று சொன்னார்.

ஃ

"ஒருவன் நமது காரியத்தை உடனே நிறைவேற்றிக் கொடுக்கிறதாய்க் கடிதம் வெகு விசுவாசமாக எழுதுகிறான். அதை நம்பி நமது சங்கதிகளை யெல்லாம் அவனுக்குத் தெரிவிக்கிறோம். அவனோ பலமாதங்களாகியும் எந்த சங்கதிக்குமே பதில் தராமல் மௌனமாக இருந்து விடுகிறான். இத்தகைய மனிதனைப் பற்றி என்ன நினைக்கிறது'' என்று தொந்தி செட்டியார் கேட்டார். அதற்குத் தாண்டவக் கோன்— "நினைக்கிறதென்ன, அந்த மனுஷ்யன் ஒரு கபட உருவம், ஏதோ ஒருகால் நல்ல நினைவு தோன்றி முதலில் நமக்கு எழுதியிருக்கலாம்; பிறகு அடுத்த நிமிஷத்தில் கபடப் பூனையாகி, எவன் வேலை எப்படிப் போனால்தானென்ன என்று நினைத்து ஒதுங்கிக் கொண்டு மௌனமாகி விட்டிருக்கலாம். இத்தகைய நிச்சயபுத்தியில்லாதவர்களை விட மண் குதிரையை நம்பி ஆற்றிலிறங்குவது மேல்'' என்று புகன்றார்.

ஃ

"அவனால் தனக்குச் சிலகாரியங்கள் ஆகக் கூடுமென்று நினைத்து, அவன் தன் வீட்டிற்கு வருகிற ஒவ்வொரு தடவையும் அவன் விரும்பிக் கேட்டதை யெல்லாம் தூக்கிக் கொடுத்து அனுப்புகிறான். அவனோ வெகு விசுவாசப் பூனையாக யாவற்றையும் சுருட்டிக் கொண்டு ஊர் போய் ஒரு காரிய உதவியும் செய்யாமலே கம்மென்று இருந்துவிடுகிறான். இப்படிப் பலமுறை நடந்த பின்பு மறுபடியும் வருகிறான். முன்பு தன்னை ஏமாற்றிய இவனைக் காணும் போது இம்முறை இவனிடம் ஏமாறக் கூடாதென்று உறுதி செய்து கொள்கிறான். வந்தவனும் வெகு நேரம் பேசிக் கொண்டிருந்து மயக்கி, முன்னைப்போல் ஏமாற்றி எதையாவது சுருட்டிக் கொண்டு போகப் பார்க்கிறான். ஆனால், அது முடிகிறதேயில்லை. கடைசியில், அவனே ஏமாறிச் சலிப்புடன் வெறுங்கையாய் எழுந்து செல்லுகிறான்'' என்றுஇஞ்சி பச்சடியார் பகர்ந்தார், இத்துடன் நமது கடையும் பூர்த்தி பெற்றது.

'பகதூர்' போர்வண்டு செட்டியார்.

# புலாலுண்பது கூடாது.



புலாலை நல்லதுணைக் கருவிகளைக் கொண்டு சோதித்துப் பார்த்தால், அதில் ஒன்றுக்குப் பாதி வெறுந் தண்ணீரென்றும், மீதியின் யோக்யதை உலர்ந்துபோன சில இலைகளுக்குள்ளதைவிட அதிகமில்லை யென்றும் தெரியவரும். சொற்ப செலவில் ஆகாரம் செய்து உடம்பிலும் சதைப்பற்றிருக்க வேண்டுமானால் புலாலுண்பது நல்லதல்ல. மழை காலத்தில் நமது உடம்பில் இருக்கவேண்டிய அளவு உஷ்ணத்தை மாம்ஸம் தராது. இறைச்சி தின்பதிலுள்ள சுகம் சொல்லுமுன் அதன் ஆபாஸத்தைச் சகித்தாக வேண்டும். அதற்குள்ள யோக்கியதை யெல்லாம்கூடி ஏதோ வாடிக்கையில் வந்து விட்ட தோஷமும், அதனிடத்துள்ள குருட்டபிமானமுமே ஒழிய வேறில்லை. ஆறு அணுவுக்கு வாங்கக்கூடிய இறைச்சியைவிட அதில் ஐந்தில் ஒரு பங்குக்கு வாங்கக்கூடிய கந்தமூலங்களில் அதிக பயனிருக்கிறது. அநேகம் இறைச்சிகளில் ஒன்றுக்குப் பாதி சுத்த ஜலம் சமாகவே ஒழிவதால், தண்ணீருக்கன்றோ அரைப்பங்கு பணம் தருவதாகிறது.

ஃ

முள்ளங்கி, செங்கிழங்கு, சர்க்கரை வள்ளிக்கிழங்கு இவற்றைவிடப் புலாவில் அதிக சதைப்பற்றுக்கு இடமிருக்கிறதா? பட்டாணி, துவரை, அவரை, உளுந்து, கடலை இவற்றிலுள்ள சதைப்பற்றில் பாதியேனும் அந்தப் புலாவில் கிடையாது. இது மட்டுமா? உடம்புக்கு வேண்டிய அளவு உஷ்ணம் செய்வதில், கோதுமைமா, ரவைமா, தினைமா, கேழ்வரகுமா, சோளம், கம்பு இவற்றிற்குள்ள யோக்கியதையில் காற்பங்குகூட இறைச்சி யிடமில்லை யென்று சிறந்த வைத்திய நூல்கள் சொல்லுகின்றன.

ஃ

உயிருடன் நெடுங்காலம் ஜீவித்திருப்பதற்கு இன்றி யமையாதவை சதைக் கொழுப்பும், அக்கினிபலமும் தான். இவற்றைக்தருவது ஊனூட்டி (Nitrogen) இருந்தை (Carbon) என்னும் இரண்டும் தான். இவ்விரண்டும் போதுமான அளவில்லாவிடில் உடம்புக்குப் பல கேடுகள் உண்டாகும். நோயின்றியிருக்க வேண்டுமானால் இவை நல்ல அளவாக உடம்பில் சேர வேண்டும். நமக்கு நன்றாய்த் தெரிந்ததும், அற்பவிலையே யுள்ளதுமான காய் கறிகளில் இவை வேண்டிய அளவு அதிகமாய்க் கிடைக்கும். இறைச்சியைவிடப்பட்டாணியில் காற்பங்கு புஷ்டியும் சூடும் அதிகமாயிருப்பதால் அரைக்கால் காசு பட்டாணி வாங்குவதை விட்டு, ஐந்து காசு இறைச்சி வாங்குவது வியர்த்தமான செலவே. ஆட்டிறைச்சி-மாட்டிறைச்சிகளைவிட, ஆறுமடங்கு அதிகமாய் உஷ்ணம் தருவதும், குறைந்த விலை

---

நீர்நுரையோடும், நெல்லு உமியோடும், சந்தனமரம் பாம்போடும், சுகந்த புஷ்பச்செடிகள் சில முள்ளோடும் கூடியிருத்தல் போல், சற்கருமங்களும் இடையூறுகளுடன் கூடி யிருக்கின்றன.

“இந்து சாதனம்”

யுள்ளதுமான அரிசி, தினமா இவை இருக்கும்போது தேகத்துக்கு வேண்டிய அளவு கூடு தாராத இறைச்சியைத் தின்பது ஸகவாச தோஷமே.

ஃ

மாடும் ஆடும் பச்சிலையையும் புல்லையும் தின்னும். புலாலுண்ணும் மனிதரோ இந்தப் பச்சிலையாலுண்டான சதையைத் தின்கிறார்கள். மோரில் 838—குன்றுமணி ஊனூட்டியும் (Nitrogen) 88—குன்றுமணி இருந்தையும் (Carbon) இருக்கிறதென்றும், மாட்டிறைச்சியில் 320—குன்றுமணி ஊனூட்டியும், 23—குன்றுமணி இருந்தையும் தான் இருக்கிறதென்றும் ஒரு மகா பண்டிதர் சொல்லி யிருக்கிறார்.

ஃ

அன்றியும், கந்த மூலங்களைத் தின்பவர்களுக்குள்ள பலத்தைவிட இறைச்சி தின்பவர்களுக்கு மிகவும் குறைந்த பலம்தான். கந்த மூலங்களையே தின்று வளரும் குதிரைகள், யானைகள், ஒட்டைகள், காண்டாமிருகங்கள் இவைகளுக்குள்ள பலம் புலாலுண்ணும் மிருகங்களுக்கில்லை. புலி சிங்கங்களுக்குப் பல மில்லையா வெனில், விசேஷ ஆயுதங்களான நகம், பல் இவற்றால் வரும் தைரிய பலமும், இவற்றைக் கொண்டே அஞ்சி நடுங்கிப்போகும் மற்றப் பிராணிகளின் துர்ப்பலமுமே யல்லாது, யானைக்குள்ள பலமும், அல்லது குதிரைக்குள்ள பலமும் புலிக்காவது சிங்கத்துக்காவது கிடையாது. 60—அடி நீளமும், 10—அடி சுற்றளவுமுள்ள மரத்தை ஒரு முட்டாய் முட்டித்தள்ளவும், தள்ளி இழுத்துக் கொண்டு போகவும் யானையால் முடியும். அதில் 100-ல் 1-பங்குள்ள மரத்தை அசைக்கவாவது சிங்கத்தால் முடியுமோ? நல்ல பளுவுள்ள ஆளைத் தூக்கிக்கொண்டு மலைப்பாதையில் தினம் ஒன்றுக்கு 40-மைல் நடக்கும் பலம் குதிரைகளுக்குண்டு. புலியால் அது முடியுமா? ஒரேவித வேலை செய்துவரும் இரண்டு தொழிலாளிகளில் ஒருவன் புலாலுண்டும், ஒருவன் கந்த மூலங்களையே தின்றும் வருவானாகில்—நிச்சயமாய்க் கந்த மூலம் தின்பவனே பலவானாவான். இமயமலைச் சாரலிலிருப்பவர்கள் கோதுமையே தின்று ஜீவிப்பவர்களானாலும் அவர்களுடை பலம் புலால் தின்பவர் யார்க்குமில்லை. "ஊனைத் தின்றூனைப் பெருக்காமை முன்னினிதே."

## மூன்றாவது மனிதன் லாபமடைகிற வழி.

பிராது ஆத்திரகோப கலக சந்தர்ப்பத்தில் தாங்கள் அந்த சமயம் ஏதேனும் லாபமடைய முடியுமா வென்று ஆவலாதிகொண்டு அருகிலே நிற்போர் சிலர் உண்டு. ஒரு வஸ்துவை மனைவி வேண்டாமென்றுத் தூர எறிகிறாள். கணவன் ஆத்திரத்துடன் அருகிலிருப்போரிடம் அதைத் தந்து நீங்கள் கொண்டுபோங்கள் என்கிறான். அவர்களும் மெதுவாக அதை எடுத்துக்கொண்டு சென்றுவிடுகின்றனர். இருவருடைய சச்சரவிலே மூன்றாவது மனிதனுக்கு லாபம்!

# ஸ்திரீகளின் கரங்களும் நகங்களும்.



நமது ஸ்திரிகளிற் பெரும்பாலார் சமையல் செய்தல், ஆடைகளைத் துவைத்தல் முதலிய குடும்ப வேலைகளை எல்லாம் செய்து வருவதால், அவர்கள் தம் கைகளையும், நகங்களையும் நன்றாய் சுத்தம் செய்து கொள்வதில் சிரமம் எடுத்துக் கொள்ளாமலிருப்பது வருந்தத்தக்க விஷயமாகும். வீட்டு வேலைகளைச் செய்யும்போது மணல், சாம்பல், புளி, சாணி இவைகளைத் தொட்டுக்கொண்டு, பின்னர் அரைகுறையாகத் தம் கைகளை அலம்புகிறார்கள். கைகளைத் துடைத்துக்கொள்ள அவர்கள் பிரத்தியேகமாய் சீலை ஒன்று உபயோகிப்பதில்லை. புடவையின் ஒரு தலைப்பிலேயே கைகளைத் துடைத்துக் கொள்கின்றனர். அன்றியும், இரண்டொரு விரல்கள் அசுத்தமா யிருந்தால் அந்த விரல்களை சுத்தம் செய்ய சிரமமெடுத்துக் கொள்ளாமல், பக்கத்திலுள்ள சுவர் கதவு முதலியவைகளிலேயே துடைத்துக்கொள்கிறார்கள்.

சில ஸ்திரீகள் குழந்தைகளுடைய மல ஜலத்தையோ, மற்ற அசுத்தங்களையோ கையினல் வாரிப்போட்டுவிட்டு, புடவையில் துடைத்துக்கொள்கிறார்கள். ஓய்வு நேரங்களில் சில ஸ்திரீகள், குழந்தைகள், அல்லது தம் பந்துக்களுடைய தலையிலுள்ள பேனை எடுத்து இரண்டு நகங்களுக்கிடையேயாவது, சீப்பிலாவது வைத்து நசுக்குகின்றனர். சிலர் மூக்கில் விரலைவிட்டு நோண்டிக்கொண்டே யிருப்பர். மூக்கிலுள்ள அழுக்கைச் சிந்திவிட்டுப் புடவையிலேயே துடைத்துக்கொள்வர். இங்ஙனமாக அழுக்குப்படிந்த கைகளை அவர்கள் சுத்தம் செய்துகொள்வதில்லை. நிற்க, சிலர் நகங்களைப் பெரிதாக வளர்த்து வைத்திருக்கிறார்கள். இது சொறிந்து கொள்வதற்கோ எதற்கோ அறியோம். ஒரு நகத்தை மாத்திரம் வளர்த்து வைத்துக்கொண்டு அதனிடையில் அழுக்கு சேர இடம் கொடுக்கின்றனர்.

சிலர் மூக்குச் சிந்திய விரல்களைக்கொண்டே அரிசி வெந்ததா வென்று பதம் பார்க்கிறார்கள். சிலர் பால், ஜலம், மற்ற பானங்களின் உஷ்ணக்கிரத்தை அறிய விரலைவிட்டுப்பார்க்கிறார்கள். பட்சணங்கள் முதலானவைகளில் எறும்பு, ஈ முதலியவைக ளிருந்தால், அவைகளை அவர்கள் வளர்த்து வைத்திருக்கும் நகத்தால் எடுத்தெரிகின்றனர். இதனால் நமது உணவுப் பொருள்களுக்கு எவ்வளவு அபாயம் ஏற்படுகிற தென்பதைச் சிந்தித்துப் பாருங்கள். ஈக்களும், கிருமிகளும் வியாதிகளை உண்டுபண்ணுவதாக நாம் நினைக்கிறோம். நமது கைகளும் நகங்களும் எவ்வித வியாதிகளை யுண்டுபண்ணக்கூடு மென்பதைக் கவனியுங்கள். சொறி அல்லது சினப்பை நகத்தினால் சொறியப்பட்டால் அந்த இடம் வீங்கிப்போய் விடுவதை நாம் காணவில்லையா? நமது உணவுப் பொருள்களில் இந்த நகங்களும், அழுக்குப்படிந்த விரல்களும் பட்டு விடுவதனால் எவ்வளவு அபாயம் ஏற்படுமென்பதை நாம் நன்றாய் யோசித்துப் பார்த்தல் வேண்டும்.

ஆகவே, புசிக்குமுன் கைகளை நன்ருகச் சுத்தம் செய்து கொள்ள வேண்டும். உணவு பதார்த்தங்களை ஸ்திரீகளும், வேலைக்காரர்களும் தொடுமுன் கைகளை நன்ருகச் சுத்தம் செய்து கொள்ளும்படி வற்புறுத்தப்படல் வேண்டும். பொதுவாக, கைகளையும், நகங்களையும் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டிய அவசியத்தை நம் ஸ்திரீகள் நன்ருக உணரவேண்டியது முக்கியமும் நன்றுமாகும். ச. முனிஸ்வாமி பிள்ளை,

சாஸ்வதி சபைத்தலைவர், டர்பன், நெட்டால்.

## ஆ! ஒண்டி மனிதனே!

நீ அநுபவித்த இன்பங்களென்ன? உனது செல்வ ராசிகளென்ன? பிரதாபங்களென்ன? ஆரவாரங்களென்ன? சபைக்கு முதல் மனுஷ்யனுய், குடும்பத்தின் தலைவனுய் நீ இருந்த அந்தஸ்தென்ன? எஜமானனுய்ப் பெரிய பதவியில் வாழ்ந்ததென்ன? உன் ஜீவியத்தில் நீ பிறருக்குச் செய்த நன்மைகளோ வெகு சொற்பம். நீயும் உன் வீட்டினரும் சுகமாக இருக்கவே நீ உழைத்தாய். அதன்பொருட்டு எத்தனையோ பேரைக் கெடுத்து லாபமடைந்தாய். உன்னுல் நடுநடுங்கிச் சோர்ந்தவர் பலர். மோசம் போய்க் கதறியவர் அநேகர். உன் கபடவலையிற் சிக்கி அனுதைகளாய் அழுது புலம்பினேர் எண்ணிலர். உன் சொந்த பந்துக்களுக்கும் நேசர்களுக்குங்கூடத் துரோகம் செய்தாய். ஊராரின் பொருள்களெல்லாம் உன்கைக்கே வந்துவிடவேண்டுமென்ற பேராசையினனுகத் திரிந்தாய். ஓபாது கோர்ட்டுக் கச்சேரியாகக் கிடந்தாய். உன்னை எதிர்த்துக்கொள்ள வெகுபேர் அஞ்சினுர்கள். கடைசியில் நீ பெற்ற லாபமென்ன? உன் வஞ்சகம்மே உன்னைக் கெடுத்தது. வீடும் நிலங்களும் யாவும் போய் வாடகை வீட்டிற் புகுந்து வறுமையே கதியானுய். கடைசியில் பிணியானுய். பிணமானுய். உன்னை மசானத்தில் ஒண்டிக்கட்டையாகக் கிடத்தி உன்னைச் சேர்ந்தவர்கள் சென்றுவிட்டார்கள். தீயினில் நீ எரிந்துகொண்டிருக்கிருய். அடுத்த நிமிஷத்தில் பிடி சாம்பலாகிவிடுவாய். இப்போது உன்னைத் தொடர்வது என்ன? நீ செய்த புண்ணிய பாபங்களே. புண்ணியம் நீ செய்யவில்லை. பாபங்களே உன் பின் வருகின்றன, ஆ! மசானத்தில் தனியே கிடக்கும் ஒண்டி மனிதனே! உன் முடிவு இதுவே!! உன்னைச் சேர்ந்தோரும், நீ மிக நம்பிய உலகமும் இப்போது எங்கே?

# விநோத விளக்கம்

1. யுத்தம்:—பெருங் கொலைகள்.

2. சமாதானம்:—பரிசு பெறுவதற்காக நடக்கும் ஒரு குஸ்தி முடிவடைந்ததும் சிறிது நேரம் சந்தடியின்றி யிருப்பதுபோல, ஒரு யுத்தம் நடந்த பின்னர் இன்னொரு யுத்தம் துவங்குவதற்கு முன்வரையுள்ள இடைக்காலமாகும்.

3. போர்ச் சேவகன்:—தனது நாட்டிற்காக உயிரைக் கொடுக்க அல்ல; உயிர்களை வாங்கப் பழக்குவிக்கப்பட்ட ஒருவன்.

4. சேனைத் தலைவர்:—மனிதர்களையும், தேசங்களையும் பந்தயமாக வைத்து ஆடும் சூதாடி.

5. சேனையிலுள்ள பாதிரி:—இயேசு கிறிஸ்து இப்பொழுது உயிரோடிருந்தால், அவர் போர்ச் சேவக உடையை யணிந்து, தேசத்தின் கொடியை வணங்கி நின்று, பீரங்கிப் படையின் நாலாவது சேனையைச் சேர்ந்த மேஜர் இயேசு கிறிஸ்து என்ற பெயருடன் விளங்குவார் என்று தவறாகக் கருதுபவர்.

6. யுத்த நிருபர்:—யுத்த சமயத்தில் யுத்த உண்மைகளை மறைப்பதற்காக அனுப்பப்பட்ட ஓர் பத்திராசிரியர்.

7. ராஜ தந்திரி:—தனது நாட்டிற்காகப் பொய்யுரைப்பதற்கு அமர்ந்த ஓர் உத்தியோகஸ்தர்.

8. யுத்த மந்திரி:—கொலை செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்பவர்.

9. தேச பக்தன்:—தனது நாட்டிலுள்ளவற்றிற்காக, அதை நேசிப்பவன்.

10. யுத்த தளவாடங்கள்:-சமானஸ்தர்களைப் பயமுறுத்தவும், தமக்குக் கீழ் உள்ளவர்களை உபத்திரவிக்கவும், தற்காப்புக்காக என்ற வேஷத்துடன் உபயோகிக்கப்படும் ஆயுதங்களாகும்.

11. பேச்சுச் சுதந்திரம்:—எங்கும் சமாதானம் நிலவ, விசேஷமான பேச்சு ஒன்றிற்கும் இடமில்லாத சமயத்தில், பிரஜைகளுக்கு அளிக்கப்படும் ஓர் விசேஷ உரிமை.

12. பிரசார வேலை:—பொய்களையே அதிகமாகப் பரப்புதல்.

## II

நெப்போலியனது மொழிகள்:—

1. கற்பனையினாலேயே உலகம் நடைபெறுகிறது. மனோவியாபகமில்லையேல் மனிதர் மிருகங்களுக்கொப்பாவார்.

2. உலகில் இரண்டு வகையான சக்திகளே யுள. அவை வாளும் மனதுமே. கடைசியில் வாளின் பலம் மனோ பலத்திற்குத் தோற்று விடுகிறதென்பதை நாம் எப்போதும் காண்கிறோம்.

3. அபிப்பிராய சுதந்திரமே இக்காலத்தின் முக்கியமான வெற்றியாம்.

4 நீதி பரிபாலனம் தாட்சண்யத்திற்கு உட்படும் நாட்டில் சமூக ஒழுங்கு என்பது காணப்படாது.

ச. முனிஸ்வாமி பிள்ளை.
"சாஸ்வதி சபைத்தலைவர்"
டர்பான், நெட்டால்.

---

மிகவும் மிதம்மீறிவிட்டவர்களை அந்தசமயம் கண்டிக்கப்போவது அடிதடி கொலையிலும் முடியலாமாதலால், அதற்குப் புத்திசாலித்தனமாய் வேறு ஒரு காலத்தை வைத்துக்கொண்டு ஹித வார்த்தைகளாலேயே திருத்துவது மேல்.




# ஓர் பெரியாரின் வறுமை.

[1]பருதியின் கீழுள பழமையாம் [2]பதிமிசை
வறுமையால் வாடிய வன்றுயர் சரிதம்
கணக்கிற் படுமோ? கணக்கிற் படுமோ?
மங்காப் புகழுடை சங்கப் புலவரும்

தெய்வப் புலமைத் திருவள் ளுவரும்
உய்வன வருளிய [3]வுவாமதிக் [4]கிழவியும்
இம்மேனும் முன்னே இன்கவி இசைக்கும்
கம்பரும் ஏனைய் கவிஞரும் மற்றுந்

தமிழ்க்கென உழைத்த தக்கா ரனைவரும்
உமியோடு கலந்த வோர்பிடி சோறும்
தின்பதற் கிலாமற் றியங்கிய கதைகள்
முன்பே நீங்கள் முற்றுய் அறிவீர்

எனினும்,

என்கதை யுங்கட் கியம்பக் கேண்மின்!
அன்புடன் நீங்கள் அதனைக் கேண்மின்!
என்பெயர் பெரிதே என்புகழ் பெரிதே
என்னை யறியா ரின்றிந் நாட்டில்

இலையென மொழிவன் இதுகா லினிதே
கலைதே ரறிவைக் கற்பதற் காக
எத்தனை யாண்டுக ளேகின விரைந்தே
எத்தனை நூற்கள் ளென்பெய ராலே

இத்தமிழ் நாட்டி லிலங்குவ பெரிதே
எத்தனை கீர்த்தி எத்தனை புகழ்ச்சி
அத்தனைக் கேற்ப வருந்துயர் மிகவே
வறுமையாம் வாழ்வில் வாழும் எனக்கோ

வரவோ சிறிது: வருஞ்செல வெல்லாம்
வரவினை மீறியே வதைக்கு மேனையே
அதிகம் வரினே அன்றே வந்திடும்
அதற்காச் செலவு எங்கிருந் தாகிலும்

---

1. பருதி—சூரியன், பதிமிசை—பூமியினிடத்து 3. உவாமதி—முழுவதும் உணர்ந்த 4. கிழவி—ஔவையார்

என்செய யானும்! எப்படி மிகுத்தியே
என்றியான் ஒழிப்பேன் எனக்குள் வறுமை
[5]நல்குரவொன்றால் நான் படுந் துயரம்
சொல்வதற் காமோ சொல்வதற் காமோ?

புத்தா டையின்றி பொத்தற் கந்தல்
ஒன்றையா னுடுத்தது மொருசிறு இட்டிலி
இன்றியே பசியால் இருந்தவோர் நிலைமையும்
இன்றும் இதுவரை எனக்காச் சட்டை

ஒன்றுந் தைத்தே உடுக்காத் தன்மையும்
அன்பர் உவந்தே அளிப்பதை அணிவதும்
ஒன்றும் அறியீர் உலகத் தீரே
உண்ணற் கரிசியும் வண்ணான் கூலியும்

எண்ணுமேச் செலவும் ஆகுமே கடனால்
அதான்றி:
புண்ணிற் கோலைப் புகவிடல் போல
மிஞ்சிய கவலையால் மிகுதுயர் படுமெனை
கொஞ்சும் மழலையாற் கெஞ்சிக் கிட்டியே

என்மகள் இவ்விதம் என்னைக் கேட்பாள் :—
ஒருபா வாடை ஒன்பது மாதமா
வருமா? அப்பா! தருவீர் தருவீர்
என்றே எண்ணி இன்னும் இதனை

நன்றாய்த் துவைத்தே நான்மிக உடுத்தேன்
'என்னநீ என்று மிதனையோ உடுப்பாய்
என்றே பள்ளியில் ஏசுறார் எனையே
அப்பா, இதனை எப்படிச் சகிப்பேன்?

எப்படி யாகிலும் எங்கிருந் தாகிலும்
வாங்கித் தருக வண்ணம் பலவுள
பாங்கமர் நாலிரு பாவா டைகளே!
முன்னே தைத்த முரட்டுச் சட்டை

பின்னாற் கிழிந்தது; பீற்றல் எனக்கேன்
என்றே என்மகன் எதிரின் மொழிவ
பின்னே வந்தொரு பிள்ளையும் மெதுவாய்
எனக்கொரு நகையும் ஏனிது வரையும்

---

தங்கள் வயிற்றுப்பாட்டுக்குத் தாளம் போட்டுக்கொண்டு பிறர் கையை எதிர்பார்ப்போர்தான் அற்பத்தனமாய்ப் பிறரைப் பேசுகிறார்களே ஒழிய, ஸகல சம்பத்தும் கூடிவரப் பெற்றுள்ளோர் அவ்விதம் பேசுகிறதில்லை.

5. நல்குரவு—தரித்திரம்.

மனமூவந் தளிக்கா மறைத்தீர் எனுஅக்
கூறுஞ் சமயம் கொண்டாள் என்பால்
ஆறு மாத அருஞ்[6] சிறுன் றன்னை
மெல்லத் தந்தே மெதுவாய் ஏகினள்

புல்லினுஞ் சிறிய பூணே அதற்கிலை
என்செய யானே! என்செய யானே
இத்தனை மகிழ்ச்சியி லெத்தனை விருந்து
தள்ளவும் போகா தமருடன் குந்தியே

உள்ளதை யெல்லா மொழுங்கா யுண்ணும்
வறுமைப் பிணியால் வாடும் யானே!
பெருமையும் பெரும் புகழ்ச்சியு முடையேன்
அருமையா யென்னுல் ஆக்கிய நூற்களை

விருப்போ டெவரும் வியந்தே கொள்வர்
இரவும் பகலும் இருகண் விழித்தே
சலியா முயற்சியாற், றொழில்பல புரியினும்
தொலையலை வறுமை! தொலையலை வறுமை!

சகிக்கவோ என்னுல் சற்றும் ஆகலை—
அகத்திற் றூய்மை அடியேன் அடைந்தும்
ஆண்டவன் என்றே அருள்வர் தெரியலை
வேண்டும் ஆசி விருப்போடு நல்குமோ?

வறுமைப் பிணியும் [7]குறைநிறை வாழ்வும்
என்று மாயுமோ ஈசனே அறிவர்—
என்றுயர் அடங்கா ஏட்டிலே எழுத—
என்னையும் பொருளா ஏற்றவர் காப்பதும்
என்சிறு கல்வியை ஏற்றதா மாற்றியும்
எனக்குள கவலைகள் எல்லாந் தீர
மனமகிழ் மக்களை மாண்புடன் அருளியும்
எழுதுவ வெல்லாம் எழுதி முடித்தும்
அழுத்தமா வென்மனம் அமையவே வதற்காம்
பொருந்தும் பொருளை இருத்தியென் மனத்தே
அருளுவ தவரே! அருளுவ தவரே!
அவனருளாலே அவன்றாள் வணங்க
பவப்பிணி யகலப் பண்ணுவ தவனே
ஆசைப் பெருக்கால் அவனையே [8]இறைஞ்ச
நேசம் வைத்தேனை நேரிய வழிகளில்
கொண்டு செலுத்துங் கோமன் அவனே

6. சிறன்—சிறுவன்,
7. குறைநிறை—குறைவுகள் மிகுந்த. 8. இறைஞ்ச—வணங்க.

பண்டேன் றவத்தால் பார்ப்பவ ரேவரும்
எங்கணும் அன்போ டேதிர்கோள வைத்தே
இங்கொரு வர்க்கும் என்றலே வணங்காத
தன்மையும் அருளிய தயாபரன் இவ்வொரு

துன்பமாம் வறுமை தந்ததும் தமியேன்
நன்மையின் பொருட்டே! நன்மையின் பொருட்டே!
எல்லாம் உணர்ந்த இறையவ னறிவரே
நல்லதே துவன நமக்கெலாம் நல்கவே

எனவே

[9]பொறுதியா இருப்பன் வறுமைப் பிணியை;
உறுதியாய்ப் போக்குவர் [10]உறுகவல் ஒழியும்
[11]மிடியினின்றும் விடுதலை பெறு வேன்
விடியுமென் னுளும் கொடியினி லினிதே.

மு. துரைப் பிள்ளை, சிலோன்.

9. பொறுதியா—பொறுமை. 10. உறுகவல்—மிகுதியான. 11. மிடி—வறுமை.

## அவர்களுடைய மானத்தைக் காப்பாற்று.

தமது வீட்டில் கலகம் சண்டையிட்டுக்கொண்டு அந்த ரோஷத்தாலும், அங்குபட்ட அவமரியாதையாலும் மனது வெதும்பி உன் வீட்டிற்கு வந்து தங்க விரும்புகிற வர்களை அன்போடும் ஆதரித்து உதவி செய். அவர்களை இகழ்ந்த இடத்தாருக்கு, அவர்களுக்கு மானமுண்டு, தங்க இடமுண்டு என்று நீ காண்பித்து அவர்களின் மானத்தை மதிப்புடன் காப்பாற்றிவிடு. கொதித்த உள்ளம் உன் வீட்டில் வந்து தங்கியதிலிருந்து ஆறி சாந்தமடையும் படி நீ செய்வதானது, நெருப்புப் பிடித்த இடத்தில் ஜலத்தை ஊற்றி அணைத்து உதவி செய்கிற காலசகாயத் திற்கு ஒப்பாக இருக்கும். கடவுளும் அதற்கு மகிழ்வார்.

சிலர் நம்மைச் சந்திக்க வரும்பொழுது வீட்டுப் பெண்களை ஜாக்கிரதை யாய் இருக்கும்படி எச்சரித்து உள்ளே அனுப்பி விட்டுப் பிறகு வந்தவர்களை வெளியிற் சென்று கண்டு பேசவேண்டி யிருக்கிறது.

உனக்குக் காப்பிஹோட்டலில் உபசாரமும், நாடகம் சினிமா காட்சிக ளும் உதவுகிறவர்கள் ஏதாவது தங்களின் சொந்த காரிய லாபத்திற்காகவே அதைச் செய்கிறவர்களாக இருக்கலாம். சும்மா சும்மா காசு செலவாகுமா?

# வாழ்க்கைக் குறிப்புகள்.

(5-வது கமலம் 776ம்-பக்கத்தின் தொடர்ச்சி.)

10. கர்ப்பத் தடையைப் பற்றி எங்கும் பெரு முழக்கமாய் இருக்கின்றது. அதற்கான நூல்களும் வெளி வந்துள்ளன. அவற்றுள் அநேக உபாயங்களும் சொல்லப் படுகின்றன. பெண்கள் உபயோகிக்கும் ரப்பர் கருவி யென்றும், ஆடவர் உபயோகிக்கும் ரப்பர் கருவி யென்றும் வெவ்வாருக உள்ளன. பெண்களின் கருவியைப் பெண்கள் ஏற்றுக் கொள்வதற்கு அவர்கள் தக்க கல்வியும், அறிவும், அக்கருவியின் ஆவசியகத்தைப் பற்றிய தெளிவும் நிரம்பியவர்களாயிருக்கவேண்டும். அதில் ஏற்படுகிற சிரமத்தையும் சகிக்க அவர்கள் நாண மற்று ஒப்புக்கொள்ளக் கூடியவர்களாயிருக்கவேண்டும். இக்கருவி அணிவதில் இயற்கையாகப் பெறுகிற இன்பத்தில் முக்கியமான பாகம் குறைந்து விடுகிற தென்பதே அநுபவம். இயற்கையாக அநுபவிக்கிற இன்பத்திற்கும், செயற்கையில் கருவி யணிந்து அனுபவிக்கிற இன்பத்திற்கும் பேதம் அவசியம் இருந்தே தீரும். துப்பட்டி ஒன்றை முதுகில் போர்த்துக்கொண்டு முதுகின் அரிப்பு நீங்குவதற்குத் துப்பட்டி மீது கீறினுல் அரிப்பு நிவர்த்தி அவ்வளவாக முதுகிற்குத்தோற்றுது. துப்பட்டியை எடுத்துவிட்டுக் கீறினுல் நன்கு தோற்றும். அரிப்பும் உடனே அடங்கும். அவ்விதமேபோல, இக்கருவியை உபயோகித்து அனுபவிக்கும் செயற்கை நலத்திற்கும், அக்கருவியின்றி இயற்கையில் நுகரும் நலத்திற்கும் எவ்வளவோ பேதம் இருக்கின்றது. ஏதோ கைக்கு அகப்பட்டதை உடனே எடுத்து வாசிக்கிற சந்தோஷத்திற்கும், கைக்கு அகப்பட்டதை உடனே வாசிக்க முடியாமல் கண்ணுடியை யணிந்த பிறகு வாசிக்கிற சந்தோஷத்துக்கும் எவ்வளவு வித்தியாசமுண்டோ அவ்வளவு இதிலு முண்டு. இதில் முக்கியமான விஷயம் யாதெனில், கருப்பாசயத்தின் நுனியைப் புருஷபாகம் தொடுவதற்கின்றி நடுவில் இக்கருவியால் தடை யேற்படுவதில் நுகரவேண்டிய சிரேஷ்டமான அனுபவ நலம் குறைந்தும், திருப்தி யற்றும் போகின்றது. எற்கெனவே நெய்யில் சுட்ட அதிரஸத்தைத் தின்று பழகியவர்களுக்கு எண்ணெயிற்சுட்ட அதிரஸத்தை யுண்பது எப்படி யிருக்குமோ அதுபோலவே இந்தக் கருவியின் உபயோக விஷயமும் அத்தனை மகிழ்ச்சிக் குரியதாக இராது. ஃ

11. இனி, ஆடவாது சுக்கிலத் தடைப்பைகளைப்பற்றி ஆராய்வோம். இந்தக் கருவிகளை விற்க வியாபாரிகள் செய்யும் விளம்பரங்கள் வெகு தடபுடல்! இக்கருவிகளைப் பற்றிய அனுபவமே ஜனங்கட்கு அதிகமில்லை. வியாபாரிகள் மட்டமான கருவிகளையே விற்கிறுர்கள். பெறுவோரும் விலை நயமாயிருப்பதையே முதலில் கவனித்து உயர்ந்ததைப் பெறத்

---

வெளியூரில் இருக்கும்பொழுது எவ்வளவோ ஆவலைத் தன் வீட்டின்மீது வைத்துத் தன் ஊர் வந்து சேருகிறுன். வந்தபின் வீடு பழய மாதிரியே கலகவீடு ஆகி ஏன் வந்தோமென்று எண்ணும்படி வேம்பாகக் கசக்கிறது.

தவறிவிடுகிறார்கள். மட்டமான தைப் பெற்று உபயோகிக்கையில் அது புருஷ அவயத்திற்குப் போதுமான அகலமற்று அவயவத்தை மிகவும் பிகு வாய்ப் பிடிப்ப தாகிறது. அது அவ யவத்தையே புண்ணாக்கியும் விடு கிறது. அதிக அழுத்தமாய் அக்கருவி அவயவத்தைப் பிடிப்பதால் துரிதஸ் கலிதமும் சொப்பனஸ்கலிதமும் கூட நேருகின்றது. ஆதலின், பெரிய அளவிலுள்ள கருவியை அதிகவிலை கொடுத்துப் பெறுவதே சிலாக்கியம். எவ்வித பிகுவுமன்றி அணிவதற்குச் சுலப முள்ளதாய், அழுத்திப் பிடிக் காததாய் இருக்கவேண்டும். இவ்வ ளவு பாடுபட்டு அணிவதில் அதனைப் பெண்பாலார் விருப்புடன் ஏற்பதே யில்லை. அது அன்னோரின் பாகத் தைப் புண்படுத்துவது போன்ற ஒரு அவஸ்தையைத் தருவதாகவும் காண் கிறது. ஸ்திரீகள் அரை மனதுடன் இணங்குவதன்றி இதை வெறுக்கவும் வெறுக்கிறார்கள். கர்ப்பாசயத்தின் நுனியைத் தொடுவதற்கின்றி இந்த ஆடவர் கருவி நடுவில் நிற்பதில் சுகானுபவம் அவ்வளவாகத் திருப்தி படுவதில்லை. இதன்றி இக்கருவி களைக் குழந்தைகள் பார்த்து எடுத்து இதென்னவென்று வினவுகையில், பதில் சொல்ல நாணி அதட்டி அவர் களிடமிருந்து சைப்பற்றவும் வேண்டி வருகிறது. இக்கருவிகள் விரைவில் கிழிந்து விடுவதால் மறுபடியும் ரூபாய் களைச் செலவிட்டு வாங்கவேண்டும். ஆகவே, இக்கருவிகளை உபயோகிப் பதைவிட, மாதவிலக்கான நாளி லிருந்து 20—நாள் சேராதிருந்து, அதன்பின் சேரின் கர்ப்பமுண்டாக மாட்டாதென்று சொல்லப்படுகிறது

எந்த சமயத்திலும் உன்னை நம்பி ஒரு விஷயம் தெரிவித்த வனைக் காட்டிக் கொடுத்து விடாதே. உன்னைக் தட்டிக் கொடுத்து அந்த விஷயத்தை மெதுவாக அறிந்து கொள்ளப் பல பிரயத்தனங்கள் நடக்க லாம். அவர்களின் சிலாகிப் பையோ, பிரீதியையோ பெறு வதற்காக வாய்விட்டுச் சொல்லி விடாதே. கூறிவிடுவது சுலபம். மனத்தில் அடக்கிப் பிறருக்கு நன்மை செய்வதே கஷ்டம். எது கஷ்டமோ அந்தக் கஷ் டத்தை நீ தாங்கினால்தான் கட வுளும் உன்னைத் தாங்குவார்.

## சந்தாதார் கவனிக்க.

ஒவ்வொரு சந்தாநேயரும் நம் "அமிர்த குணபோ தினி" மாதப் பத்திரிகையின் ராப்பர் காகிதத்தில் 4-வது பக்கம் குறித்துள்ள சென்னைப் பதிவு எண் M 2151-ஐ, தங்களுடைய சந்தா எண் என்று நினைத்துக்கொள்ளாமல், விலாஸம் எழுதியிருக்கும் ராப்பர் காகிதத்தின் வலது பக் கத்தில் கையினால் எழுதப்பட்டிருக்கும் தங்கள் சந்தா நெம் பரைக் கவனித்து அதைத் தனியே குறித்து வைத்துக் கொள்ளும்படி கேட்டுக்கொள்ளுகிறோம். மானேஜர்.

# நாரத மகரிஷி



பூர்வ ஜன்மத்தில் இவர் தாஸி புத்திரனா யிருந்தார். தாஸியை ஒரு ரிஷி மோகித்து அவருக்கு நாரத முனிவர் பிறந்தார். இவரது தந்தையின் ஆச்ரமத்திற்கு ஒருமுறை ஜனகாதி மகரிஷிகள் வர, நாரதர் அம்மகரிஷிகளின் சிசுரூஷையை வெகு பயபக்தியுடன் செய்தார். மகரிஷிகளின் நித்திய தத்வ விசாரமும் பிரம்ம கீர்த்தனைகளும் கேட்டு பகவானிடம் திடமான பிரீதி நாரதருக்கு உண்டாகத் தலைப்பட்டது. பிரேமமயமான அந்தக்கரண ஆகாசத்தில் பக்தி சந்திரோதயமாயிற்று. அவருடைய சிறுவயதையும் பக்தி வைராக்கிய ஸத்ய தர்மங்களையும் கண்ட மகரிஷிகள் ஆநந்தர்களாய் ஞானோபதேசம் செய்து தேச ஸஞ்சாரம் செய்யும்படி ஆக்ஞாபித்தார்கள். ஆனால், தாயாருக்கு ஒரே மகனானதால் இவருடைய பிரிவை அவள் ஸகிப்பது அரிதா யிருந்தது. கடைசியில் தாயாருடன் தேச ஸஞ்சாரம் செய்து வருகையில் அன்னை பாம்பினாற் கடியுண்டு மடிந்தாள். தாயின் வியோகத்தால் பரமதுக்கம் உண்டாயிற்று. எந்தக் காலத்தில் எது நடக்கவேண்டுமோ அதைத் தடுக்க யாரால் முடியும்? ஜீவ காலம் ஸஞ்சலமானது.

⁂

அதன்பின் நாரதர் ஆரண்யம் சென்று ஏகாந்தமான ஸ்தலத்தில் உட்கார்ந்து பிரம்ம சிந்தனை செய்தார். மறுபடியும் தேச ஸஞ்சாரம் தொடங்கினார். பிரம்ம தரிசனத்தை எதிர்நோக்கி அவர் கண்களிலிருந்து வழிந்த தண்ணீருக்கு அளவில்லை. ஒருமுறை பிரம்ம தரிசனம் கிடைத்தது. உடனே சித்தத்திலிருந்தும் அந்தத் தோற்றம் மறைந்து விட்டது. மறுபடியும் அந்தத் தரிசனத்தை யடையப் பிரயத்தனப் பட்டார். பிரயத்தனம் வியர்த்த மாயிற்று. துக்கமடைந்தார். அப்போது, ஆகாச வாணி, ஹே பாலகா! இந்த ஜன்மத்தில் மறுபடி உனக்கு பிரம்ம தர்சனம் கிடைக்காது. மறு ஜன்மத்தில் தரிசனம் பெறுவாய். பூர்வ ஞானத்துடனும் கூடியிருப்பாய் என்று சொல்லி ஒரு பிரம்ம வீணையும் அவரிடம் கொடுக்கப்பட்டது.

⁂

ஒருநாள் சிபி ராஜ்யம் சென்றபோது அவ்விடத்தில் பர்வதரிஷியின் தரிசனம் கிடைத்தது. அவர்கள் இருவரும் வெகு நாள்வரை ஸ்நேகமாயிருந்தார்கள். பர்வதரிஷி விவாகம் செய்து கொள்ள நினைத்து சிபி ராஜனின் குமார்த்தியை விரும்ப, சிபி ராஜன் அதற்கு மறுத்து விட்டார். நாரதரும் அப்பெண்ணையே விரும்பியதறிந்த பர்வதரிஷி கோபத்தோடு குரூபியாகக் கடவதென்று சபித்தார். நாரதரும் சும்மா விராமல் உமக்கு ஸ்வர்க்கப் பிராப்தி யில்லாமற் போகட்டு மென்றார். இருவரின் நேசமும் பங்கமடைந்தது. பர்வதரிஷி பூமியைப் பிரதக்ஷிணம் செய்துவரச் சென்றார். நாரதர் குரூபியாய்

---

மனம் கூட்டுறவைப்போல் மாறும். புதிதாய் வந்த மனைவிக்கு வேண்டாதவர்களைக் கணவனும் தனக்கு வேண்டாதவர்களாக எண்ணிவிடலாம்.

அங்குதானே ஈசுவரத்தியான மாயிருந்தார். தன் பொருட்டுக் குருபியான ரிஷியின் சரித்திரத்தைக் கேட்ட சிபி ராஜனின் புத்திரி பரம துக்கிதையாய்த் தந்தையின் அனுமதி பெற்று ரிஷிக்குப் பணிவிடை செய்து வந்தாள். வெகுநாள் கழித்து பர்வதரிஷி நாரதரைப் பார்க்கவந்தார். ஒருவரையொருவர் பார்த்து ஆநந்தம் கொண்டு பரஸ்பரம் சாபத்தை நிவர்த்தித்துக் கொண்டனர். ராஜகன்யைக்கும் நாரதருக்கும் விவாகமாயிற்று. வெகுநாள் இல்வாழ்வி லிருந்து கடைசியில் ஸ்வர்க்கஸுகமனுபவித்து, பிறகு பிரம்மனுடைய மானஸ புத்திரனாய்ப் பிறந்தார். ஃ

அன்று முதல் கடுமையான பிரம்மசரிய விரதத்தை யனுஷ்டித்து தேவதத்த வீணையை வாசித்து ஜனங்களுக்கு ஈசுவரகுண ஸ்வரூபத்தைப் போதித்துவருகிறார். ஸுமதுரமான வீணையை வாசித்து ஸுஸ்வரத்தால் ஈசுவர கீர்த்தனையைப் பாடிவரும் நாரதரின் ஹிருதயத்தில் பரப்பிரம்ம ஸ்வரூபம் தோன்றி ஜ்வலிக்கின்றது. சித்த விருத்தி ஆநந்தமா யிருக்கின்றது. பகவானின் கிருபையால் பூர்வ ஜன்மத்து அறிவுண்டாகிறது. வியாஸருடைய சித்தத்திலுண்டான துக்கத்தை நிவர்த்திக்க நாரதர் தமது பூர்வ கதையைச் சொன்னார். அதிலிருந்து வியாஸ மகரிஷி பிரஸன்ன சித்தராய் பாகவத மூலமாய்ப் பக்தியை வர்ணித்து ஸந்தோஷ மடைந்தார். தேவரிஷியான நாரதர் பூரண பிரம்மசாரியாயும், தத்வ ஞானியாயும், மகா வித்வாம்சராயும், அதிவிரக்தராயும், உத்கிருஷ்டராயும், நல்ல காயனராயும், பரம சதுரராயும், நிஜமான தர்ம வீரராயும், ஸதாசாரஸம்பன்னராயும், மகா யோகியாயும் இருந்தார். காயமோ அழிவது, கீர்த்தியே பூமியில் நிற்பது என்பதின் ஸத்ய தத்வத்தை இம்மகான் உலகுக்கு வெளியிட்டவராவார்.

அதிகமாக நெருங்கித் தொந்தரை செய்கிறவர்களிடம் ஒரு பத்து ரூபாய் கடன் கேட்டுவிட்டால் பிறகு அவர்கள் எட்டியே பார்க்கமாட்டார்கள். அல்லது நாம் கொஞ்சம் கடனாகக் கொடுத்து விடினும், நம்மை அவர்கள் வழியில் கண்டாலும் அந்தக் கடனைத் தீர்க்காத ஞாபகம் வந்து பதுங்கிக் கொள்வார்கள். அவர்களின் தொந்தரையும் அத்துடன் நிவர்த்தியாகும்.

# பாம்பைப்பற்றிய விசேஷங்கள்.

ஒரு நாள் காலையில் பாம்பு பிடிக்கும் ஜாதியைச் சேர்ந்த பிடாரஸ்திரீ மூன்று வயதுள்ள குழந்தையை இடுப்பில் கட்டிக்கொண்டு, ஒரு பாம்பைக் கழுத்தில் சுற்றிக் கொண்டு நான் தங்கியிருந்த வீட்டில் பிச்சைக்கு வந்தாள். அந்த வீட்டிலிருந்த ஐந்து வயதுக் குழந்தையொன்று அவளிடத்திலிருந்த பாம்பைக் கண்டு பயந்தது. இந்தக் குழந்தை பாம்பைக்கண்டு பயப்படுகிறதே, அவள் இடுப்பிலிருக்கும் சிறு குழந்தை பயப்படுகிறதா பார் என்றேன். நான் இப்படிச் சொல்லவும், அவள் தன் கழுத்திலிருந்த பாம்பை எடுத்து அவள் குழந்தையினுடைய கழுத்தில் சுற்றிவிட்டாள். அக் குழந்தை அதைத் தனக்குக் கழுத்தி விட்ட பூமாலைபோல் கருதிக் கையினால் அப் பாம்பைப் பிடித்து வாயில் வைத்துக்கொண்டு விஷமம் செய்து விளையாடிக் கொண்டிருந்தது. இந்தக் காக்ஷியைக் காணவும் அதைக் கண்டு பயமுற்ற ஐந்து வயதுக்குழந்தை முற்றும் பயம் தெளிந்து கிட்ட இருந்து வேடிக்கை பார்த்தது. இதனால் பாம்பைப் பற்றிய பிரஸ்தாபம் தொடங்கிற்று.

ஃ

சாரைப் பாம்புக்கு வாயில் விஷமில்லை யாதலால் கடித்தால் குற்றமில்லை யென்றாள் அப்பிடாரச்சி. சாரைப்பாம்பு கடித்தால் தோஷமில்லையா என்ற கேள்வி பிறந்த பொழுது, சாரைக்கு வாலில் விஷம்; கடித்து விட்டு கடித்த இடத்தை வாலாலடித்தால் தோஷமுண்டு என்றாள். பிறகு நல்ல பாம்பைப்பற்றிப் பேச்சு வந்தபொழுது "நல்ல" என்ற பெயர் ஏன் வந்த தென்றால், அது கடித்தால் ஹிம்ஸையின்றி உடனே விஷம் தலைக்கேறி மரண முண்டாவதால் அதற்கு "நல்ல" என்றபெயர் கொடுக்கப் பட்ட தென்று அருகிலிருந்த பண்டிதர் பகர்ந்தார். நல்ல பாம்பு தனக்குக் கெடுதி செய்தால் கடிப்பதோடு, அதற்கு அஞ்சினாலும் கூசினாலுங்கூடக் கடிக்கு மென்று அப்பிடாரச்சி கூறினாள்.

ஃ

கூத்தாடி நல்ல பாம்பை மேலே விட்டுக்கொண்டு கூத்தாடுகிறானே; அதற்கு ஆத்திரம் உண்டாகும்படியாக ஒன்றும் நேரிடாத மட்டில் அவனுக்கும் பயமில்லை; அதுவும் ஒன்றும் செய்யாதுதான். ஆனால், அதற்கு ஆத்திர முண்டாக நேரிட்டாலோ உடனே அப்பாம்பு அவனுக்கு மரணமளிக்கும் தன்மையதாக மாறி விடுகிறது. சில வருஷங்களுக்கு முன்பு சென்னையில் ஒருவன் மலைப்பாம்பு ஒன்றை அவன்மேல் சுற்றும்படி விட்டு வேடிக்கைக் காட்டிக் கொண்டிருந்தான். அடுத்த நிமிஷத்தில் மடமட வென்று முறுக்கு நொறுக்கினாற் போல ஒரு சப்தம் கேட்டது. உடனே நின்று கொண்டிருந்த மனி

---

படிக்கத் தெரியாத ஒருவர்—நான் எந்தக் கடிதத்திலும் என் கையெழுத்தைப் போட்டதில்லை, பிறகு அதை ஒரு ஆதாரமாகவும் காண்பிக்க முடியாது—என்று வெகு கௌரவமாகச் சொல்லிக்கொள்கிறார். அச்சா! பலே பேஷ்!.

தன் சுற்றின பாம்பு சுற்றியபடி இருக்க, வெட்டிச் சாய்த்த மரம்போல் கீழே விழுந்து விட்டான். பிறகு அந்த மனிதனின் உடலைப் பரிசோதனை செய்து பார்த்த பொழுது 180-இடங்களில் எலும்பு நொறுங்கியிருக்கக் காணப்பட்டது. பாம்பைப் பரிசோதித்துப் பார்த்ததில் அதனுடலில் 2-அங்குல அகலத்திற்கு சதை கிழிந்து காயம் பட்டிருந்தது. அதன் காரணத்தை ஆராயுங்கால் அந்த வித்தையாடியின்தேகத்தில்பொதிந்த தமரூசியொன்று பாம்பின் சரீரத்தில் பட்டுக் குத்த, அது உடனே தனது உடம்பை நெருக்க இந்த வில்லங்கம் விளைந்ததென்று தெரியவந்தது.

ஃ

அமெரிக்காவில் ஒரு இளைஞன் ஒரு மலைப்பாம்பை இரவல் வாங்கி ஒரு அறையில் விட்டு வைத்து அதன் குண சுபாவங்களை அறிய முயன்முன். பாம்பு அங்கிருந்த நாற்காலியைச் சுற்றிக் கொண்டிருந்தது. அத்தருணத்தில் ஒரு பூனை உள்ளேவர, அதே நிமிஷத்தில் பாம்புதான் சுற்றிக்கொண்டிருந்த நாற்காலியை உடலை நெருக்கிச் சுக்குத் தூளாய்ப் பொடி செய்து விட்டு அந்த அறையில் பரபரப்போடு ஆத்திரத்துடன் ஓடியலையத்தலைப்பட்டது. இதற்குக் காரணம் பூனை வந்ததாலென்று நினைக்கலாம். உண்மை அப்படியல்ல; அந்த நாற்காலியில் நீட்டிக்கொண்டிருந்த ஆணி முனையொன்று பாம்பின் உடலில் குத்த, அதனுல் அது சேஷ்டை செய்ய நேரிட்டதென்று தெரியவந்தது. அந்த ஆணி குத்தின காயம் பாம்பின் உடலிலிருந்து உபத்திரவம் செய்ததால் அது அறையில் ஆத்திரப்பட்டு ஓடியலைந்தது.

ஃ

நல்ல பாம்பு கடித்து இரத்தம் பெருகி மயக்கமான ஒருவர் பிழைத்துக் கொண்டதையும் கண்டிருக்கிறேன். அதன் காரணம் விசாரித்த பொழுது, பாம்பு கடிக்கையில் தலையைத்தூக்கி நேராகக் கடித்தால் விஷம பாய்வது அவ்வளவாக இல்லையென்றும், ஒரு சமயம் பிழைத்துவிடலாமென்றும், ஆனுல், கடிக்கும் பொழுது தலையைச் சாய்த்தே கடிப்பதால் பக்கத்திலுள்ள விஷம் பாய்ந்து மரண மூண்டாக்குகிறதென்றும் ஒரு நிபுணர் கூறினுர். பாம்பினிடத்தில் உயர்ந்த ஞான குணமும், மிக்க கொடிய விஷகுணமும் சேர்ந்திருப்பதால், அதை ஆத்மஞான போதத்தில் அடிக்கடி உதாரணமாக எடுத்துக்கூறியிருக்கிறுர்கள். "பாம்பாட்டிக்குப் பாம்பினுல் சாவு" என்ற தமிழ்ப் பழமொழியும் உண்டு.

ஒவ்வொரு வழியில் ஒவ்வொரு மனிதனுக்கு ருசி தட்டுகிறது. அந்தந்த வழியின் படியே அவனவன் நோக்கமும் இருக்கிறது. அதற்கே அவனவனும் பணத்தைச் செலவிட்டு அனுபவித்தறிய ஆவலாகி கொள்கிறுன். தான் காண விரும்புகிற ருசிகாத்தைப்பற்றி எவ்வளவோ நினைவுகள் நினைக்கிறுன். ஆயுள் முழுதும் தன்னுடைய ருசியிலேயேசிந்தனை.

---

அவரவர்களுக்குத் தகுந்ததுபோல் பேசிவிட்டு மெதுவாய் நழுவிவிடுகிறவர்கள் எதுவும் பேசாமலே இருந்துவிடுவோர்களானுல், அதுவே பெரிய உபகாரம். இவர்கள் பேச வரவும் வேண்டாம், பிறகு நழுவவும் வேண்டாம்.

# சிறுமணித்திரள்

("பன்னிரு மரகதங்களின் மர்மம்" என்ற நாவலினின்றும் திரட்டியது.)

(125-ம் பக்கத் தொடர்ச்சி.)

854. அறிவுள்ளோர் கோபத்தைத் தள்ளினாலும் எச்சமயத்திலும் கோபமின்றி இருத்தல் கூடாது. அநுக்கிரஹம் இருந்தால் நிக்ரஹமும் இருக்க வேண்டியதவசியம். பகவானும் துஷ்டர்களைத் தண்டிக்கவில்லையா? ஆதலால் கோபமே இல்லாதவன் ஒன்றிற்கும் உதவான் (309.)

855. வார்த்தையில் குணமிருந்தால் அது ஸ்திரீகளால் சொல்லப் பட்டிருப்பினும், பாலரால் சொல்லப் பட்டிருப்பினும் புத்திமான்கள் அதை அங்கீகரிக்கத் தயங்கார். (312.)

856. யோசனையுடன் கூடியவனை சகலசம்பத்துகளும் தானே வலிய வந்தடையும். (314.)

857. நதியின் மணற்கரை சலசலத்துப்போய் வெள்ளம் வரும் பொழுது அழிவதுபோல், அற்புத்தியுடைய சத்துருக்கள் அபாயம் வரும் போது மித்திரர்களாலும் கைவிடப் பட்டு அழிவர். (316.)

858. துஷ்டர்களுக்கும் பொறுமையுள்ளவர்க்கும் இவன் ஸாதுவே; இவன் நமக்குத் தீங்கிழையாதவனே என்ற எண்ணம் கிடையாது. எதாவது கெடுதல் புரிய அவர்கள் வழி தேடிக்கொண்டேயிருப்பர். (320.)

859. மானிட வாழ்க்கையில் அதை நடத்திச்செல்லும் பிரதான அங்கம் பெண்ணுருவமேயாம். (340)

860. ஒரு சலித்த உள்ளம் வெற்றி பெறுவதற்குப் பெண்மணிகளின் துணை முதலில் முக்கியமாய் இருக்கவேண்டும். (340.)

861. பெண்மணி ஒரு ஆயுதத்திற்குச் சமமானவள். ஆடவர்கள் அந்த ஆயுதத்தை உபயோகிக்கும் திறத்திற்குத் தக்கபடி அந்த ஆயுதத்தின் வலிமை பிரகாசிக்கும். (343.)

862. கிழவயதில் விவாகம் செய்துகொள்வது எதற்காக? அநுபவிக்கவல்லவோ விவாகம் செய்வது? அழகுக்குமட்டும் பார்த்துக்கொண்டிருப்பதென்றால், மூங்கின மனைவியைப்போல் ஒரு சிலை செய்து வைத்துக்கொள்கிறதுதானே. (368.)

863. ஸகோதரர்களைப் பிரிப்பது இடையில் தோன்றும் மனைவியே! அதற்கு முன் வரையில் தன் ஸகோதரிக்காகப் பூஷணங்களைச் சேகரித்துத் தந்தவன், தனக்கு ஒரு மனோகரி வாய்த்ததும் தன் ஸகோதரியை அத்துடன் மறந்து புதியவளை அலங்கரிக்கப் புறப்பட்டுக் கொள்கிறான். (433.)

864. தேச பேதத்தாலும், ஜாதி பேதத்தாலும், வர்ண பேதத்தாலும், சௌந்தர்யத்தின் ருசி, பின்ன பின்னமாய் விதவிதமாயிருக்கும். (434.)

865. யுவதிகளை நேருக்கு நேரில் கண்டு குணஸ்வபாவங்களை ஸ்வீகரிக்

---

நம் கண்ணெதிரிலேயே ஒரு தீச்செயல் நடப்பினும், பிறகு அதைப் பலர்முன் நிரூபிப்பது கஷ்டம். நாமே முடிவில் பொய்யராவோம்.

கவும், காரியத்தைப் பேசி முடிக்கவும் பெண்ணின் மனதைத் தம் வழியில் திருப்பவும் கூடியவர்கள் பெண்களே. (437,)

866. ஒருமித்துப்போன மன துக்கு இடையே தடுக்கும் திரை எதுவும் கிடையாது. (438.)

867. மனதில் இருக்கிற ஆசை யை எதிரில் உடனே சொல்லிவிட முடிகிறதா? எதிரில் நிற்போரின் கருத்து எவ்வெவ்விதமோ? (439.)

868. ரமணிகளின் கஷ்டத்தை எவர் அறிவார்? வெளியிற் சொல்ல வும் வெட்கம், சொன்னாலும் குற்றம், தெரிவித்தாலும் பகிரங்கமாகிவிடும், நெஞ்சுக்குள் அடக்கவும் கூடுவ தில்லை. (440.)

869. விரும்பிய மன்மத ரூபன் எதிரில் தோன்றிய காலத்தும் பெண் களுக்கு நாணம் நடுவே திரைவிட்டுத் தடுக்கின்றது. (441.)

870. நாணம் என்பது காதலர் கள் பரஸ்பரம் ஏகாந்தமாய்ச் சந்திக் காதவரையில்தான் சுற்றிக்கொண்டே நிற்கும். (441.)

871. அன்ன வஸ்திரத்துக்கு மார்க்கமில்லாதவன் ஸ்வப்பனதேவி யின் மோகமந்திரத்தால் தன்னை மறந்து நித்திரையில் ராஜஸுகத்தை யநுபவிக்கிறான். (466.)

872. ஸ்வப்பனம் ஸத்தை அஸத் தாக்கும், மூர்க்கனை ஞானியாக மாற்றும், யௌவன புருடனை விருத் தனாகவும், விருத்தனை யௌவனமுள் ளவனாகவும் மாறவைக்கும். (466.)

873. ஸ்வப்பனம், இருள், நித் திரை மூன்றும் ஒன்றுசேர்ந்து பிர பஞ்சத்தை யெல்லாம் இஷ்டப்படி யாட்டி வருகின்றன. (466.)

P. G. குலசேகரன்.

---

சிலாது நன்றியறிந்த ஸ்வப வம் தங்களுக்கு ஆபத்தில் உத வியர்களைக் காலமுழுதும் மறப் பதேயில்லை. ஆயிரம் தடவை அந்த உதவியைத் திரும்பத் திரும்பச் சொல்லியபடியே கிடக்கிறார்கள். கடவுளும் அத் தகையோரை நல்ல நிலைமையி லேயே வைத்துக் கௌரவப் படுத்துகிறார். நல்லதுநினைக்கப் பட்டவர்கட்கு எங்கும்நல்லதே

# ஈசுவர சந்திர வித்யாஸாகரர்



இவர் கல்கத்தா ஸம்ஸ்கிருத கலாசாலையில் மிகவும் உயர்ந்த பரீக்ஷையில் தேறியவுடன் வித்யாஸாகரர் என்னும் பட்டம் அளிக்கப்பெற்றார். "வித்யாஸாகரர்" என்றால் ஸமுத்திரம் போன்ற வித்தையை யப்யஸித்தவர் என்றர்த்தம். அக்காலத்தில் வித்யாஸாகருக்கான வயது 21-தான். இத்தனை சிறுவயதில் இப்பட்டம் பெறுவதென்றால் ஸாமான்யமல்ல. இவர் மகா புத்திமானென்றும், எதையும் உய்த்துணரும் வல்லமைசாலியென்றும் அறிகிறோம். புத்திமட்டும் இருந்தால் இத்தனை பெரிய கியாதி அவருக்கு உண்டாயிராது. புத்தியோடு மிகுந்த உழைப்பும் இருந்திருக்கவேண்டும். எவன் புத்திமானென்று அகங்காரம்கொண்டு உழைக்காமல் வீண்காலம் போக்குகிறானோ அவன் கீர்த்தியடையமாட்டான்.

ஃ

வித்யாஸாகருடைய தந்தை ஏழை. வஸிக்க இடமும், உண்ண உணவும், உடுக்க நல்ல துணியும் இல்லாதவர். சமயலுக்கும் வீட்டு வேலை செய்வதற்கும் ஒரு ஆளை நியமிக்கச் சக்தியற்றவர். ஆதலின் நாற்றம்பிடித்த சந்தில் ஒரு சின்ன வீட்டில் குடியிருந்தார். வித்யாஸாகரர் படிக்கும்போதே காலையிலும், இரவின் முற்பகுதியிலும் சமைத்தல்—வீட்டைப் பெருக்குதல்—துணிகளைத் தோய்த்தல்—ஆகிய தொழில்களைச் செய்துவந்தார். ஒருநிமிஷ நேரத்தையும் வியர்த்தம் செய்யாமல் வித்தையை அப்யஸிப்பதிலேயே செலவழித்துவந்தார். ஃ

இவர் தன்னுடைய துணி, தமயன்மார்களின் உடை, தந்தையின் வஸ்திரம் ஆகிய இவைகளையெல்லாம் தோய்க்கும்போதே காலேஜில் படித்த பாடங்களை மனனம் செய்வார். பிரதி தினமும் இரவு 10-மணிநேரம் வரையில் பாடங்களை படித்துப் பின்னர் தன் தந்தையை நோக்கி, "ஸ்வாமி, நான் படுத்துக்கொள்ளுகிறேன்; தயவுசெய்து 12-மணிக்கு அதாவது நடுராத்திரியில் என்னை எழுப்பிவிடுங்கள்" என்று கெஞ்சுவார். பின்னர் 12-மணிமுதல் ஸூரியோதயம் வரையில் பாடங்களைப் படிப்பார். வித்யாஸாகரர் ஒவ்வொருநாளும் 2 அல்லது 3-மணிநேரம்தான் நித்திரை செய்வார். 3-அடி நீளமும் இரண்டு அடி அகலமுமுள்ள ஒரு தாழ்வாரத்தில் பாயை விரித்துப் படுத்துக்கொள்வார். அங்கே கொசுக்களுக்குக் குறைவில்லை. ஆயினும், வித்யாஸாகரரைப்போல் ஊணுறக்கமின்றி உழைப்பவரை அவைகள் தடைப்படுத்திவிட முடியுமோ? குறுகிய உடலும் பெருந்தலையும் கண்டு வித்யாஸாகரரைப் பரிகாஸம் செய்யாதவர் இல்லை. உத்தம புமான்களை உலகம் பரிகஸிக்கும்படியாக அவர்களுக்கு ஏதேனும் ஒரு குறைவு வைப்பது பகவானின் ஸங்கல்பமாயிருக்கிறது. எத்தனையோ வித்தியா வைபவம் பெற்றிருப்பினும்

---

போக்கிடம் கெட்டவர்களும், ஒரு தினத்திற்குக்கூடப் போய்த் தங்க இடமில்லாதவர்களும்தான் அதிகமாய்த் துள்ளி ஆரவாரிப்பர். எல்லா அந்தஸ்தும் கூடியவர்கள் எந்த சப்தமும் செய்யார்கள். எதையும் ஸகிப்பார்கள்.

அதை மதியாமல் அந்த அங்கஹீனத்தையே உலகத்தவர் பெரிதாகக் கொண்டு ஏளனம் செய்ய, கற்றறிந்த புத்திசாலிகளுங்கூட இவர்களுடன் கூடிக்கொண்டு கேவலப்படுத்துகின்றனர். ஃ

வித்யாஸாகருடைய தந்தை உண்மையான பிரீதியை வைத்திருந்தாலும், அவர் புத்திசாலியான குமாரனைத் தண்டித்த விஷயம் வியஸனிக்கத்தக்கதே. பிரதி தினமும் பள்ளிக்கூடத்திற் கற்ற பாடங்களை ஒப்புவிக்கும்படி வீட்டிற் சொல்லுவார். அவ்வாறு ஒப்புவிக்கையில் ஒரு பிசகு செய்தாலும் நாயை யடிப்பதுபோல் புத்திரனை நையப் புடைப்பாராம். ஸாதாரணமாய்த் தந்தைக்குக் கீழ்ப்படிந்து நடக்கும் இயற்கையையுடைய வித்யாஸாகரர் ஒருநாள் தந்தையடித்த அடியைப் பொறுக்க முடியாமல் அவரை எதிர்த்துப்பேசி அயல் வீட்டிலிருக்கும் ராமநாதகங்குனியிடம் போய்ச்சேர்ந்தார். ராமநாதர் வித்யாஸாகரரைச் சமாதானப்படுத்தித் தந்தையிடம் கொணர்ந்து விடவே, தந்தை முன்னிலும் அதிகமான கோபங்கொண்டு வித்யாஸாகரரை அடித்தார். அதுமுதல் வித்யாஸாகரர் பிதா சொல்வதற்கெல்லாம் பிரதியுத்தரம் கூறவும் விரோதம் செய்யவும் முற்பட்டார். எவ்வளவு பலமாக அடித்தும், எத்தனைவிதமாய் அவமானப்படுத்தியும் வித்யாஸாகாரின் மனம் திரும்பவில்லை. இப்படியாகச் சில தினங்கள் கழிந்தன. இதன்பிறகு தான் முரட்டுத்தனமாய் அடித்தது பிசகு என்று பக்ஷம் பாராட்டத் தொடங்கினர். அதுமுதல் வித்யாஸாகரரும் நல்வழியை யனுஸரிக்கலானர். ஃ

வித்யாஸாகருக்கு 14-வயது ஆனவுடன் யோக்யதையும் தனமுமுள்ள ஒரு ஸத்குல பிராமணன் தன் அழகிய பெண்ணை அவருக்குக் கல்யாணம் செய்துகொடுத்தான். இருவருக்கும் ஒரு புத்திரனும் அநேக புத்திரிகளும் பிறந்தனர். வித்யாஸாகரின் மனைவிக்கு தினமயி என்று பெயர். அவளால் வித்யாஸாகரர் சுக ஸந்தோஷங்களை யனுபவித்தார். மேற்கண்ட பெண்மணி தன் பர்த்தா மரிப்பதற்கு இரண்டுவருஷங்களுக்கு முன்னரே காலகதியடைந்தாள்.

ஃ

1841-ம் வருஷத்திற்றான் ஈசுவர சந்திரர் ஸமஸ்கிருத காலேஜில் வித்யாஸாகரர் என்னும் பட்டம் பெற்றார். இதன்பிறகு போர்ட்டு வில்லியம் ஸ்கூலில் இவருக்கு தலைமைப் பண்டிதர் வேலை கிடைத்ததால் இங்கிலீஷ் கற்கலானர். அதி சீக்கிரத்தில் வித்யாஸாகரர் ஆங்கிலத்தில் பாண்டித்யமடைந்து அநேக கிரந்தங்களை எழுதினர். வித்யாஸாகரரைப்பற்றி எத்தனையோ ரஸமான கதைகள் உண்டு.

---

அமாவாசை விரதத்தின்போது வீட்டில் தோசை சுட்டால்தான் புசிக்கலாமாம். வெளியில் விற்கிற தோசை இட்டிலி வகையை வாங்கலாகாதாம். ஆனல் இரவில்மட்டும் வெளியில் விற்கிற தோசைவகைகளை வாங்கியுண்ணலாமாம். இவை காலையில் மிச்சப்பட்ட மாவிலிருந்து சுடப்பட்டவைகள் தானே! இது பிராமணரல்லாதாரின் ஆசாரமாகும்.




## 3. இல்லறம்.

(134-ம் பக்கத் தொடர்ச்சி.)

### 232. "நீலிக்குக் கண்ணீர் நெற்றியிலே."



நீலி என்பது வஞ்சக குணமுள்ள மனைவியைக் குறிப்பிடுகிறது. எப்பொழுது வஞ்சகம் சேர்ந்ததோ அப்பொழுது அதற்குத் தகுந்த பேதபுத்தியும், உள்ளொன்று வெளியிலொன்று பேசும் போக்கும் கூடியிருக்கும். வஞ்சகியைத் தன் மனைவியாகக் கொண்டவனுடைய தலையெழுத்து துக்கிக்கத்தக்கதே. அவள் எப்பொழுதும் தாய் வீட்டுக்கு ஓடும் நினைவாகவே இருப்பாள். கணவன் எவ்வளவு கஷ்டப்படுகிறவனாயிருந்தாலும் அதில் எதும் கவலை கொள்ளாள். தனக்கு வேண்டிய நகைநட்டு, பணம் காசு இவைகளை எவ்வளவு சிக்கலான சமயத்திலுங்கூடத் தொந்தரை செய்தேனும் பெற்றுக் கொள்வதில் கவனமாக இருப்பாள். அவ்விதம் பெறுகிற நேரங்களில் "என்க்கென்றால் இல்லாமல்தான் போகும்; நான் கேட்டால் எப்போதும் கிடைக்காமல் தான் போகும்; எனக்கென்றால் தருவதற்கு மனம் வராது" என்று இவ்வாறான சுடுவார்த்தைகளைக் கூறி அந்தந்த சமயத்திற் கேற்றதுபோல் கண்ணீர்விட்டு முடிவில் தன் காரியத்தைச் சாதித்துக் கொள்வாள். நினைத்த நேரத்தில் அந்த நிமிஷமே அவள் கண்களில் ஜலம் தோன்றிக் கொள்ளும். தன் கைக்கு வளையல் வேண்டுமென்றால் அதை வெளியிட்டுக் கொள்ளாமல் வெகு பக்குவமாகக் குழந்தைக்கு வளையல் போடவேண்டுமென்பாள். அதற்குக் கணவன் சம்மதித்தால் அவ்விதமே குழந்தைக்குப் போட்டுவிட்டு அந்த சூட்டோடு சூடாக தனக்கும் வளையல் போட்டுக் கொள்ள வேண்டுமென்று வெகு பிரியமுள்ள மனுஷியாய்க் கொஞ்சி நெருங்கி மேல்விழுந்து கனத்த அன்புடனே கேட்பாள். அதினாலே கணவன் மயங்கி ஒப்புக் கொள்ளும்படியே இருக்கும். அந்த வகையில் தன் காரியம் பலிக்காவிட்டாலோ முகம் கோணிக்கொண்டு, "எனக்கு வளையலுக்கு என்றால் பணம் இருக்காது தான்" என்று கண்ணீர்விடத் தொடங்கி விடுவாள். ஒரு சிறு சண்டையும் நடுவில் முளைக்கும். நீ முதலில் குழந்தைக்கு மட்டும் என்று தானே சொன்னாய்; கையில் காசு இல்லாத

---

நிமிஷத்திற்கு ஒரு புத்தியும், ஒருமாதிரியான போக்கும் கொண்டவர்களை நம்புவதிலும் நரகம் வேறில்லை. அவர்களது உள்ளத்தின் கபடமே இப்படி தினுசு தினுசாக மாறவைக்கிறது. பேச்சுமட்டும் வெகு வெகு இனிப்பு!

சமயத்தில் என்னைப் பிய்த்துப் பிடுங்குகிறாயே என்று கணவன் கூறினால், "நானா பிய்த்துப் பிடுங்குகிறேன்; என்னை சாமி கொண்டு போகமாட்டேன் என்கிறதே, ஒரு வளையல் போட்டுக் கொள்ளக் கேட்டால் அதற்கு இத்தனை பேச்சுகளா" என்று தன் கண்ணீரைப் பெருகவிடுவாள். கடைசியிலே கணவன் அவள் பிரியப்படி வளையலுக்கும் பணம் தர வேண்டியதாகவே ஆகிவிடும். இந்தப் பணம் பிரமாதமல்ல, சாதாரணமாய்க் கேட்டிருந்தால் கொடுத்து விடக்கூடியதுதான். வஞ்சக புத்திக்காரிக்கு அவ்விதம் நல்ல தன்மையாய்க் கேட்க எண்ணம் வருமா? ஒன்றில் சிக்க வைத்துவிட்டு அந்த சமயத்தில் அதோடுகூட தன் சங்கதியையும் முடித்துக் கொள்ளுகிற நீலித்தனமாகுமிது. ஃ

இவ்விதமே தன் குழந்தைக்கு ஒரு புதிய நகை செய்ய வேண்டுமென்று கொஞ்சிக் கெஞ்சி ஸதா கேட்டுக்கொண்டே யிருந்து, அவ்விதமே அவள் புருஷனும் பவுன்கள் வாங்கித் தட்டாசாரியிடம் நகைசெய்யக் கொடுத்தபிறகு, "ஆமாம் அவளுக்கு நகை செய்தாச்சுது; எனக்கென்ன செய்தது; நான் இப்படி வெறுங்கழுத்துடனேயே நிற்கவேண்டுமா, எனக்குச் செய்கிற தென்றால் தான் மனம் வராதே" என்று நீலிக் கண்ணீருடன் கனத்த சண்டையைத் தொடங்கிக் கொள்ளுகிறாள். எவ்வளவோ பாடுபட்டு மிச்சம் பிடித்துப் பணம் சேர்த்துப் பவுன்கள் வாங்கித் தட்டானிடம் தந்து அதற்குத் தன் மனைவி சந்தோஷப் படுவாளென்று புருஷன் நினைக்கப்போக, அவளோ அதற்கு எதிர்மாறாக இப்படிச் சண்டையிடுவதைக் கண்டு திகைத்துப் போகிறான். என்டா அப்பா, இந்த நகையைச் செய்யப்போனோம் என்று கலங்குகிறான். பிறகு சாந்தமாகவே தன் மனைவியைப் பார்த்து, "நீ வெகு நாளாய்க் கேட்டு வந்தாயே யென்றும் நீ சந்தோஷப் படுவாய் என்றும் நினைத்துத்தானே எவ்வளவோ கஷ்டத்துடன் பணம் சேர்த்து நகை செய்யக் கொடுத்தேன்; உன் மகளுக்குச் செய்தது உனக்குச் செய்ததென்று சந்தோஷப்பட வேண்டாமா" என்று சொல்லுகிறான். அதற்கு அவள் ஆங்காரத்துடன் "அவளுக்குச் செய்தால் எனக்கென்ன? அவள் போட்டுக்கொள்கிறாள்; நான் போட்டுக்கொள்கிறேனா? ஒருக்காலும் அவளுக்குச் செய்ததற்கு நான் சந்தோஷப்படமாட்டேனே; எனக்கென்று செய்தால் எனக்கு இருக்கும்; அவளுக்குச் செய்தால் என்ன, செய்யாமற்போனாலென்ன, அதைப்பற்றி எனக்கு அக்கரையே யில்லை" என்று பேசி நீலிக்கண்ணீர் விடத்தொடங்கி விடுகிறாள். புருஷன் இவளுடைய நாடகத்தைக் கண்டு பிரமித்துப் போய், சம்சாரவாழ்க்கையிலே இது நல்லதொரு புத்திதான் என்று நினைத்துக்கொள்கிறான். இனி தன் மகளுக்கு நகையே செய்வதில்லை யென்றும், எல்லாம் விவாகத்தின்போது செய்துகொள்ளலாமென்றும் தன்னுள்ளே உறுதிகட்டிவிட்டுத் தன் மனைவியைச் சமாதானப்படுத்துவதற்காக ஒரு சிறுநகை அவளுக்குச் செய்துதரவும் ஒப்புக்கொண்டுவிடுகிறான். அப்படியே செய்தும் போடுகிறான். இப்படி வற்புறுத்தித் தொந்தரை செய்துதானா நகை செய்து போட்டுக்கொள்ளவேண்டுமென்றும்,

---

தங்களை விரோதித்திருப்பவர்களிடம் வலியவந்து நேசமாகிச் சமயம் பார்த்துப் படுகுழியில் தள்ளிப் பலநாளைப் பகையைத் தீர்த்துக்கொள்வர்.

கணவனே மனம்வந்து செய்து போடட்டுமென்று அந்தக் கவலையில்லாமல் களங்கமற்ற மனதாய் உண்மையான அன்பில்இருந்தால் எவ்வளவோ நகை வலியச்செய்து போட்டுவிடலாமே, அவ்வளவு பெரிய புத்தியும் பொறுமைக்குணமும் இந்த நீலிச் சிறுக்கியிடம் காணேமே யென்றும் தனக்குள்ளாக நினைத்துக்கொள்கிருன். இப்படிச் சிலநாள் சென்ற பிறகு மறுபடியும் கணவனிடம் வஞ்சகமாகத் தன் பெண்ணுக்கு காதுக்கு ஒரு தோடு செய்யவேண்டுமென்று மெதுவாக வார்த்தையைத் தொடங்குகிருள். இதைக் கேட்டதும் பழம் புண்ணுளியான அந்தப் புருஷன், "போதும் போதும், வார்த்தையை நிறுத்து, முன்பு அவளுக்கு ஒரு நகை செய்யப்போய்ப் பட்டபாடு இன்னும் மறக்கவில்லை; என்னை மறுபடியும் சிக்கவைத்து நாடகம் பார்க்க நினைத்தால் அது செல்லாது; எல்லா நகையும் விவாககாலத்தில் செய்து போட்டு விடுகிறேன்; இப்போது ஒன்றும் செய்யமுடியாது; மேலும், 'அவளுக்குச் செய்தால் எனக்கென்ன?'' என்று முன்பு நீ பேசியிருக்கிருய்; ஆகவே, அவள் விஷயத்தில் நீ சிரத்தைப்படவேண்டாமென்று பளிச் பளிச்சென்று பதில் சொல்லிவிடுகிருன். அந்த நீலியும் பதில் பேச முடியாமல் தன் திருவாயை மூடிக்கொள்கிருள். ః

இதற்குப் பின் அந்த நீலியைச் சேர்ந்த ஒரு பெண் தன் கணவனுடன் சண்டையிட்டுக்கொண்டு இவள் வீட்டிற்கு வந்து குந்துகிருள். அதைக் கண்ட புருஷன் ஏது அந்த அம்மாள் சேலை மூட்டையோடு வந்திருக்கிறதே, எத்தனை நாள் தங்க எண்ணம் என்று கேட்கப்போக, அதற்கு அவள் உங்களுக்கென்ருல் எவரும் பிடிக்காது; வேண்டாம் என்று எல்லோரையும் விலக்குகிறீர்களே என்று நீலிக்கண்ணீருடனும் தன் பேச்சுகளை ஆரம்பித்துக்கொள்கிருள். புருஷனும் மௌனமாய் விடுகிருன். வந்த பெண்ணே வீட்டு வேலையெல்லாம் தானே செய்வதாகத் தாளம் போட்டுக்கொண்டு சட்டவட்டமாக ஒரு மாதத்திற்கு மேலாகவே உட்கார்ந்துவிடுகிருள். புருஷனும் வாய்மூடிக்கொண்டு செலவுகளைச் சகிக்கவேண்டியதாய் வருகிறது. பிறகு அந்தப் பெண்ணரசியார் புறப்பட்டுப்போய்ச் சில மாதங்களானதும், மறுபடியும் தன் கணவனிடம் ஒரு சண்டையிட்டுக்கொண்டு இந்த வீட்டுக்கு வருகிருள். பழம்புண்ணுளியான புருஷன், "ஏது அந்த அம்மாள் வந்திருக்கிறதே, எத்தனை நாள் தங்க உத்தேசம்" என்று கேட்கிருன். அதற்கு அவள் நீலிக்கண்ணீருடனே, "கணவனேடு சண்டையாம்; என்னவோ இருந்துவிட்டுப் போகட்டுமே; எனக்கும் ஒரு பெண் ஒத்தாசையாக இருக்குமே; நீங்கள் இப்படிக் கேட்பீர்களென்று அப்போதே எனக்குத் தெரியுமே என்று தன் கதையைத் தொடங்குகிருள். அதற்கு புருஷன் சற்றும் ஏமாறுதவனுய், "ஒரு மனுஷாள் வந்து உட்கார்ந்தால் என்ன செலவாகுமென்று உனக்குத் தெரியுமா? மேலும் என் சோற்றுக்கு எப்போதுமே நல்ல பேர் கிடையாது; என் சோற்றைச் சாப்பிட்டவர்கள் விசுவாசமற்றுப் போகிறதே வழக்கம்; அன்றியும் தூரத்தூர இருந்தால்தான் மனஸ்தாபம் வராமலிருக்கும்; ஆகவே அந்தப் பெண்ணரசியாரை அனுப்பி வைத்துவிடு என்று கண்டிப்பாகச்

---

பந்துக்களை நம்பி ஒரு வேலை ஆரம்பித்தால் அது முடிகிறதில்லை. முடியாவிடினும் அவர்களைத்தேடி நடத்தவேண்டிய வேலைகளுமில்லாமலில்லை.

சொல்லிவிடுகிறான். அதைக் கேட்ட அவள், வந்திருக்கும் பெண்ணாசியிடம் போய் "கேட்டாயா சங்கதி, அவர் இருக்கவேண்டாம் என்று சொல்லுகிறாரம்மா, நான் எவ்வளவோ சொல்லிப் பார்த்தாய்விட்டது" என்று கூறித் தன் கணவனை அங்கு ஆகாதவனாகச் செய்துவிடுகிறாள். வந்த பெண்ணும் சிலநாள் தங்கிவிட்டு, 'போய் வருகிறேன்' என்று வீட்டுக்காரனிடம் சொல்லாமலே கோபமாய்ப் புறப்பட்டுப் போய்விடுகிறான். குடும்பத்தின் கௌரவம் மூடின கையா யிராமல் வெளியில்வந்து சந்தி சிரிக்கிறது. இவ்விதமான நீலிகளால் அவர்களை மணந்த ஆடவர் படும்பாடு தெய்வமே அறியும். பிடிவாதமும் வஞ்சகமுமுள்ள இந்த நீலி இளையாளாகவும், புருஷன் கொஞ்சம் கோழை மனமுள்ளவனாகவும் இருந்துவிட்டாலோ நெருப்புடன் சேர்ந்த காற்றவ்வளவு வேகமாய் நீலியின் காரியம் முடிந்துவிடும். எப்பொழுதும் எடுத்ததற்கெல்லாம் அழுது தன் காரியத்தை நிறைவேற்றிக்கொள்வது நீலிகளான வஞ்சகப் பெண்டிரின் வழக்கமென்பதை இப்பழமொழி எடுத்துக்காட்டுகிறது. கடைசியில் இந்த, நீலிகள் தங்களின் கபடோக்திகளாலும், கணவனை எதிர்ப்பதாலும் கண்டடைகிற லாபம் ஒன்றுமேயில்லை.

## சுற்றிக்கொண்டே திரிதல்.

எந்த இடத்தில் நுழைவதற்கு சந்து கிடைக்கும் என்று சிலர் ஓயாது சுற்றிக்கொண்டே அதே வேலையாகத் திரிவார்கள். உன்னிடத்தில் இனிக்கப் பேசியதுபோல் ஒவ்வொரிடத்திலும் தித்திக்கப்பேசி அங்கங்கும் நேசமாகிப் பலருக்கும் தெரிந்த மனுஷ்யனாய் நின்று, சமயம் கிடைத்தால் தாங்களும் உள்ளே வந்து புகுந்துகொள்ளும் நோக்கமாக இருப்பார்கள். உன்னையும் புகழ்ந்துகொண்டு, உன் வேலையையும் கைப்பற்றிக்கொண்டு, உன் ஸ்தானத்தில் அமர்ந்து உன்னைக் கீழே தள்ளிவிடவும் யோசனையாக இருப்பார்கள். ஆதலின், இத்தகையோரிடம் உன் சங்கதிகளை அதிகமாகத் திறந்து காட்டிவிடாதே. பலரிடமும் பசப்பி நிற்பவனிடம் ஒருதனியான எச்சரிக்கையுடன் இரு.

தங்கள் வீட்டில் மரணம் நேர்ந்து எவ்வளவு துக்கமாயிருந்தாலும், உண்ணும் வேளை தவறாமல் வேறிடத்திலிருந்தாவது தருவித்து ரகசியமாய்ப் புசித்துக்கொள்கிறார்கள். இவர்கள் பெரிய சாப்பாட்டு ராமர்களப்பா!

---

தந்தைக்கருகில் நின்று குமார்த்தி தலைசீவி அலங்கரித்துக்கொள்ளுகிறாள். அதைத் தந்தை ஜாடையாக நோக்கி, இந்தக் காட்சி தனக்குக் கிடைத்தது மகா பெரிய பாக்கியமென்று தன்னில் தானே மகிழ்கிறார்.




# கோனும் குள்ளநரியும்.



ஒருகால் ஒரு காட்டிலே ஒரு கோனும் குள்ளநரியும் ஒன்றுக்கொன்று சமீபமான இடத்தில் வசித்துக் கொண்டிருந்தன. அவ்விரண்டனுள் நரி மிகவும் கீழ்ப்பட்ட மிருகமாகையால், கோனுய் சொல்லுகிறபடியே அதற்கு அடங்கி நடந்து வந்தது.

2. இப்படியிருக்கையில், ஒரு நாள் இராத்திரி காட்டிலே அவ்விரண்டு மிருகமும் இரை தேடித்திரிகையில், கோனுய் குள்ள நரியைப் பார்த்து, குள்ளநரியே! இப்போது என் வயிற்றிற்கு ஏதாவது உணவு தேடிக்கொடுக்கிறயா, உன்னைத் தின்றுவிடட்டுமா என, நரி, ஐயா! அருகாமையில் ஒரு தோட்டம் இருக்கிறது; அங்கே இரண்டு ஆட்டுக்குட்டிகளைப் பார்த்து வைத்திருக்கிறேன். தங்களுக்கு வேண்டுமானல் அங்கேபோய் அவற்றில் ஒன்றைத் தூக்கிக் கொண்டு வந்துவிடலாம் என்றது.

3. அப்படியே அவ்விரண்டும் புறப்பட்டுப் போயின. கோனுய் மட்டும் அந்தத் தோட்டத்திற்குள் போகாமல் வெளியிலேயே நின்றது. குள்ளநரி மாத்திரம் பூனைபோல் மெதுவாய்க் காலடியோசைகூடக் கேளாமல் ஓடி, அந்தத் தோட்டத்திற்குள் சென்று தந்திரமாய் அங்கிருந்த ஆட்டுக்குட்டிகளுள் ஒன்றைத் திருடிக்கொண்டு வந்து தன் தோழனுக்குக் கொடுக்க, கோனுய் ஒரு நிமிஷத்தில் அந்த ஆட்டுக்குட்டியைத் தின்று விட்டது. அதைத் தின்னவே முன்னினும் அதிகமாய்ச் சுறுசுறுப்பு உண்டாயிற்று; பசி மாத்திரம் செம்மையாய்த் தணியாமல் இருக்கவே, கோனுய் தானே போய் மற்றொரு குட்டியையும் கொண்டுவந்து விடும்படித் தீர்மானித்தது. ஆயினும், அது மிகவும் மட்டி மிருகமாகையால், போகும்போதே தாயாட்டை எழுப்பிவிட்டது. அந்த ஆடு இந்தக் கோனுயைப் பார்த்து தீனசுரமாய்க் கத்த, அதைக்கேட்டு என்ன

---

கணவனைப் பிடுங்கித்தின்னும் பெண்கள் கடைசியில் வாரிக்கொள்வதொன்றுமில்லை. மனைவியை ஹிம்ஸித்தவர்கள் பெற்ற லாபமும் ஏதொன்றுமில்லை. நொந்துபோன கணவன் மனைவிகளின் சாபமும் வீணுவதில்லை.

விசேஷமோ என்று ஆட்டிடையர்கள் எழுந்து ஓடிவந்து கோனை யைக் கண்டு, அது அப்பால் அசையவுங் கூடாதபடி கொஞ்சமும் தயை தாக்ஷணிய மில்லாமல் அதை நன்றாய்க் காலொடியப் புடைத் தார்கள்.

4. பிறகு, கோனாய் நொண்டி நொண்டி ஊளையிட்டுக் கொண்டே மெதுவாய் நரியண்டை வந்து சேர்ந்து, நரியே! நீ என்னை மோசம் பண்ணினாயே! ஆட்டுப்பட்டியண்டை ஆட்டிடை யர்கள் இருக்கிறார்களென்பதை எனக்குச் சிறிதும் தெரிவியாமற் போனாயே! அவர்கள் என்னைக் கொன்றுக் குற்றுயிராக்கி விட்டார் கள் பார் என, அதற்கு நரி, நீ ஏன் இப்படிப்பட்ட சாப்பாட்டு ராமனாய்ப் பேராசைகொண்டு எனக்குக்கூடத் தெரிவியாமல் அவ்வி டத்துக்கு ஓடினாய் என்று சொல்லிற்று.

5. இப்படியிருக்க, மற்றொருநாள் அந்தப் பேராசைகொண்ட கோனாய், மறுபடியும் நரியண்டை வந்து, இன்றைக்கு எனக்கு ஏதா வது இரைதேடிக் கொடுக்கிறாயா, உன்னைத்தின்று விடட்டுமா என்று அதட்டிக் கேட்க, நரி, இதோ அண்டையில் ஒரு குடியானவனின் வீடு இருக்கிறது; அங்கே இன்று மாலை வேளையில் மிகவும் நேர்த்தி யான ஒருவகைப் பணியாரம் சுடப் பார்த்தேன்; அங்கே போய் அதை எடுத்துக்கொண்டு வந்துவிடுவோமென்றது.

6. அப்படியே அவ்விரண்டும் அவ்வீட்டிற்குப் புறப்பட்டுப் போயின. நரி தந்திரமாய் அவ்வீட்டிற்குள் நுழைந்து, வாசனை பிடித்து உற்றுப் பார்த்துக்கொண்டே, அவ்வீட்டில் நாலா மூலையி லும் தேடி, அந்தப் பணியாரம் வைத்திருக்கும் இடத்தைக்கண்டு பிடித்து ஐந்தாறு பணியாரம் எடுத்துக்கொண்டு வந்து, 'இதோ சாப்பிடக் கொண்டுவந்தேன்' என்று கோனாய் கையிற் கொடுத்து விட்டு ஓடிப்போயிற்று. போஜனப் பிரியமான அந்த மிருகம் அதை ஒரே வாயாய்த் தின்றுவிட்டு, இன்னும் வேண்டுமென்று ஆவல் கொண்டு, அந்தப் பணியாரம் வைத்திருக்கும் இடத்தைத் தானே போய்த் தேடிப் பார்த்து, அதை எடுக்கப்போய் அது வைத்திருந்த பாத்திரத்தைக் கீழே தள்ளிச் சுக்கல் சுக்கலாய் உடைத்துவிட்டது. அது கீழே வீழ்ந்த சத்தங் கேட்டு வீட்டுக்காரி வந்து பார்த்துக் கோனாயைக்கண்டு கூவ, வீட்டுக்காரன் ஓடிவந்து அதை நன்றாய்த் தோலுரியப் புடைத்துக் கால்களையும் முறித்துத்துரத்தி விட்டான்.

7. கோனாய் அந்தப் பெரும்புடையலைப் பெற்றுக்கொண்டு நடக்க மாட்டாமல் மெல்ல மெல்ல நகர்ந்து காட்டில் குள்ளநரி யண்டை வந்து, நீ என்னை இப்படி மோசம் பண்ணலாமா? அந்த

---

செத்தாரைச் சாவார் சுமந்து செல்லும் உலகமிது. இன்று இறந்தோரை நாளை சாகப்போகிறவர்கள் தூக்கிக்கொண்டு செல்வது ஒரு வியப்பான காட்சி!

வீட்டுக்காரர்கள் என்னைக் கண்டு உதை உதையென்று உதைத்து உடம்பெல்லாம் இரத்தமயமாக்கிக் காலையும் ஒடித்துப் போட்டார்களே, அந்த வீட்டுக்குள் மனிதர்கள் இருக்கிறார்கள் என்று எனக்கு நீ சொல்லவில்லையே என; நரி, நீ ஏன் இப்படித் திண்டிபோத்தனாய் அவ்விடத்துக்குப் போனாய்; வீடு என்று இருந்தால் அதற்குள் எவரும் இல்லாம லிருப்பார்களா; இது தெரியாதா; இனி இப்படிப்பட்ட சாகசச் செயலுக்கு உடன்படாதே என்றது.

8. இந்த அடி மறவாமலும் கால் செம்மையாய் ஊன்றி நடக்கக் கூடாமலும் இருக்கையிலேயே, கோனாய் மற்றொரு நாள் பெருந்திண்டியில் பேராசைகொண்டு நரியைப் பார்த்து, நீ இப்போது ஏதாவது இரை தேடிக் கொடுப்பாயா?—அல்லது நீயே இரையாகிறாயா என, நரி, இன்றையதினம் ஒரு குடியானவன் வீட்டில் விசேஷமாய் மாமிசம் ஊறப்போட்டு ஒரு அறையில் வைத்திருக்கக் கண்டேன். வேண்டுமானால், அதைப் போய்ப் புசிக்கலாமென்றது.

9. அதைக்கேட்டுக் கோனாய் வாயில் தண்ணீர் ஊற அதிக ஆவலுடன் நானும் உன்னோடு கூடவருகிறேன்; நீ என் பக்கத்திலேயே இருந்து அபாயம் வந்தால் கைகொடுக்கவேண்டும் என, நரி, அப்படியே ஆகட்டும், இல்லாவிட்டால் எனக்கும் அந்த ஆபத்து உண்டல்லவா என்று சொல்ல, கோனாய் சந்தோஷமாய் நரியோடு கூடவே புறப்பட்டு அவ்வீடு போய்ச் சேர்ந்தது. நரியும் அந்த மாமிச கண்டம் வைத்திருக்கு மிடத்தில் கோனாயைக் கொண்டு விட்டு அங்கிருந்து வெளியே வரவேண்டிய சந்துகளையும், கள்ளச் சந்துகளையும் அதற்குக் காட்டித்தானும் சந்தோஷமாய் அத்துடன் விருந்துண்ண ஆரம்பித்தது. கோனாய் பேராசையோடு புசிக்கத் தொடங்கிற்று. வயிறுறப்புசித்தும் மாமிசம் மிகுந்திருக்கவே, இவையெல்லாம் தின்றாக இன்னும் கொஞ்சம் நேரம் செல்லுமென்று கோனாய் தனக்குள்ளேயே எண்ணிக் கொண்டு மெல்ல மெல்லத் தின்றுகொண்டே யிருந்தது. நரி மிகவும் தந்திரசாலி யாகையால், அதிகமாய் உண்ணவேண்டுமென்று ஆவல் கொண்டிருந்தாலும், தன் தேகம் அதிகமாய்ப் பருத்துப்போய்த் தாம் உள்ளே புகுந்த சந்து வழியாக ஒரு வேளை வெளியே போகக்கூடாமற் போகுமோ என்னவோ என்று நாலுபக்கமும் சுற்றிப் பார்த்து, அடிக்கடி அந்த வளைக்குள் நுழைந்து பரீக்ஷை பார்த்துக் கொண்டே யிருந்தது. அதைக்கண்டு கோனாய், நரியே! ஏன் இப்படி அவசரப்படுகிறாய்? ஊரார் வீட்டுப்புசிப்பு இலவசமாய்க் கிடைத்திருக்கிறதே; நன்றாக மெதுவாய் ருசி பார்த்துத் தின்னுகிறதுதானே; நிமிஷம்கூட நின்ற

---

*தங்கள் குழந்தைகளின் துஷ்டத்தனம் தங்கள் மனதிற் படுவதில்லை. மற்ற குழந்தைகள் சிறு சப்தமிட்டாலும் பெரிய தலைவலி வந்துவிடுகிறது.*

இடத்தில் நில்லாமல் இங்குமங்கும் ஓடிக்கொண்டேயிருக்கிறாயே; உன் புத்தி என்ன புத்தி என, நரி, நான் அவசரப்படவில்லை; யாராவது திடீரென்று வந்து நம்மைப் பிடித்துக்கொண்டால் என்ன செய்கிறதென்று நாலு பக்கமும் ஜாக்கிரதையாய்ப் பார்த்துக் காவல் காத்துக் கொண்டிருக்கிறேன்; நீ அதிகமாய்த் தின்றுவிடப் போகிறாய் பத்திரம் என்றது.

10. அதைக்கேட்டுக் கோனாய், இலவசத்தில் வந்ததை நன்றாய் அனுபவித்துப் பார்த்துவிட வேண்டும். பிறகு இது கிடைக்காது. இந்த மாமிசத்தில் ஒரு துண்டு கூட விட்டுவிட்டு நான் வரமாட்டேன்; கூடுமானால் பாத்திரத்தைக் கூடப் புசித்து விடுவேன் இலவசச் சாப்பாடு அத்தனை ருசியாக்கும் என்றது.

11. இப்படியிருக்க, நரி இங்கும் அங்கும் ஓடுகிற சத்தம் பல தடவை கேட்கவே, அவ்வீட்டு மனிதன் இதென்னவென்று ஓடி வந்தான். அவனைக் கண்டவுடனே நரி ஒரே குதியாய்க் குதித்துச் சந்தில் நுழைந்து ஓடிப்போயிற்று. நரி ஓடுவதைக் கண்டு கோனாயும் அதைப் பின்தொடர்ந்து ஓட ஆரம்பித்தது. ஆயினும், அது மட்டுமிதமில்லாமல் தின்றுவிடவே, அதின் வயிறு பிரம்மாண்டமாய்ப் பருத்து அந்தச் சிறு துவாரத்தில் நுழைய மாட்டாமற் போயிற்று. இதுதான் தருணமென்று வீட்டுக்காரன் தடியெடுத்துப் புடைக்கவே அந்தக் கொடிய மிருகம் மாண்டுபோயிற்று. இது அதிக ஆசைப்பட்டதின் பலன். நரியோ சுகமாய் வீடுபோய்ச் சேர்ந்தது. கோனாய் கொல்லப்பட்ட செய்தி தெரிந்துகொண்டு, இந்த வயிறுதாரியான கொடிய ஜந்துவின் தொந்தரை இன்றோடு நீங்கிற்றென்று சந்தோஷமடைந்து பயமில்லாமல் சுகமாக வாழ்ந்து கொண்டிருந்தது. புத்தியில்லாத கோனாய் இறந்தது. புத்திசாலியான நரி சந்தோஷமாக இருக்கிறது.

---

உலகினரை மயக்க எத்தனையோ துறைகளில் எவ்வளவோ காரியங்கள் நிகழ்கின்றன. ஊன்றிப் பார்ப்பவர்களுக்கு அவை பிழைக்க வழிதேடும் தந்திரம் என்பது நன்கு விளங்கிவிடும்.

---

தம் வீட்டுக்குத் தம்மைக் காணவந்த பிறருடன் பேசக்கூட நாணங்கொண்டு மறைமுகமாய் நின்று வார்த்தையாடும் சிரோன்மணிகள் ஆடவர்களுடன் பிரஸங்கமேடைமீது நின்று பிரஸங்கங்கள் செய்வதும் வெகு விநோதமே. இதற்குக் கணவன்மார் எவ்விதம் அனுமதிக்கின்றனரோவென ஒருவர் ஆச்சரியப்படுகிறார்.



# ஹாஸ்ய சஞ்சீவினி



தடித்த கிழவர் :—ஸ்டேஷனுக்குச் செல்ல ஏதேனும் குறுக்கு வழி இருக்கிறதா ?

குறும்புக்காரப் பையன்:—அநேக வழிகள் இருக்கிறதய்யா. அதோ போகும் மனிதன் கன்னத்தில் ஓங்கி அறையுங்கள். அல்லது, அந்த வீட்டு வாசலில் நிற்கும் குழந்தையின் நகைகளைக் கழற்றுங்கள். அல்லது, அந்தப் பெண்பிள்ளையின் தலைமயிரைப் பிடித்திழுங்கள். இந்த நிமிடமே தங்களை அழைத்துச் செல்ல பெரிய தலைப்பாகை மனிதர்கள் வருவார்கள்.

தடித்த கிழவர் :—தம்பீ! எனக்கு போலீஸ் ஸ்டேஷனில் வேலையில்லை. நான் ரயில்வே ஸ்டேஷனுக்குத்தான் நேரே போகவேண்டும்.

பையன் :—ஓ! அப்படியா! இந்த வழியாகச் செல்லுங்கள்.

---

இராமநாதன் தனது நண்பனிடமிருந்து ஒரு குடை இரவல் வாங்கினான். மறுநாள் இரவல் கொடுத்த நண்பன் அதை வாங்கச் சென்றபோது இராமநாதன் குடையுடன் வெளியே போகப் புறப்படுவதைக் கண்டு, "நான் குடையைப் பெற்றுச்செல்ல வந்தேன்" என்றான்.

இராமநாதன்:—நான் என்ன செய்வேன் ? நான் வெளியே செல்லத் தயாராயிருப்பதை நீ கவனிக்கவில்லையா ?

நண்பன்:—ஆமாம்; ஆனால் நானும் வெளியே போகவேண்டுமே !

இராமநாதன் :— அதற்கென்ன ? யாரிடமிருந்தாவது ஒரு குடையை இப்போது இரவல் வாங்கிக்கொள். என் அவசரம் எனக்கு.

---

வேலப்பன் :—பலர் கடலில் சென்று மாய்வதைப் பார்த்திருந்தும் ஜனங்கள் இன்னும் கடலுக்குச் செல்வது எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது.

வேங்கிடு :—படுக்கைக்குச் செல்வோரில் பலர் இறந்துபோவதைப் பார்த்திருந்தும், ஜனங்கள் இன்னும் படுக்கைக்குச் செல்வது எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது.

---

கமலம் :—நீ அணிந்திருக்கும் இந்த ஆபரணம் ஆண்பிள்ளைகளுக்கு ஒருபோதும் மகிழ்ச்சியை உண்டு பண்ணாது.

கோமளம் :—நான் இந்த ஆபரணம் அணிந்திருப்பது ஆண்பிள்ளைகளை மகிழ்விப்பதற்கல்ல ; என் போன்ற பெண்களைப் பொறுமைப் படும்படி வருத்துவதற்கே !

---

மகன் :—அப்பா ! மனிதர் எல்லோரும் இறந்துபோவார்களா ?

தகப்பனார் :—ஆம், கண்ணே! இவ்வுலகில் வசிக்கும் மனிதர் ஒவ்வொரு

---

எத்தனையோ உத்தமகுணப் பதிவிரதாங்கனைகள் உள்ளார். பெண்களின் கௌரவ நாமம் ஒரு காலத்திலும் கெடாது. துஷ்டைகளின் கொட்டமும் அடங்குகிற காலம் அவசியம் வரும்.

வராய் இறந்துபோக வேண்டியதே. மாணத்திலிருந்து தப்ப முடியாது.

மகன்:—(சற்றுநேரம் மௌனமாக இருந்துவிட்டு) அப்பா! மனிதர் ஒவ்வொருவராய் இறந்துகொண்டேயிருந்தால் கடைசி மனிதனை புதைப்பவர்கள் யார்?

---

உபாத்தியார்:—இராமா! சுவர்க்கத்துக்குச் செல்லத் தகுதியுடையவர்கள் யார்?

இராமன்:—இறந்தவர்கள் தான்.

த. சு. சங்கரலிங்கம்.

II

சோமு:—என்டா ராமு! பழய சந்தாதார் ஒவ்வொருவரும் ஒரு புதிய சந்தாதாரரைச் சேர்த்துத் தரும்படி சென்ற மாதப் பத்திரிகையில் எழுதியிருந்ததே! நீ அதற்கு நேர்மாறாக அந்தப் பழய சந்தாதாருக்கு வி. பி. அனுப்பவேண்டாமென்று எழுதினாயே இது சரியா?

ராமு:—புதிய சந்தாதாரரைச் சேர்த்துக் கொடுப்பதுதான் நல்லது. ஆனால், அதைக் காட்டிலும் நல்லது ஒரு வி. பி. திரும்பி அதனால் பத்திரிகைக்காரர் மூன்றணா நஷ்டமடையாமலிருப்பதாகும்.

---

மாமி:—குளிக்கப்போய் என்ரோமாச்சு? குழந்தைகத்திக்கத்தித்தொண்டையும் வறண்டுவிட்டது. அவன் போட்ட சத்தத்தில் என் காதும் அடைத்துப்போய்விட்டதே. இத்தனை நாழி என்ன?

மருகி:—குழந்தை கத்திய சத்தத்தால் அடைத்துப்போன காதில் நான் சொல்லும் சமாதானம் எங்கே கேட்கப்போகிறது?

---

ரமாமணி:—என்டி ராஜம் மாதம் எப்போது பிறக்கும் என்று ரொம்ப ஆவலோடு எதிர்பார்க்கிறாயே. விவாஹத்திற்கு ஒரு வழி பிறக்குமென்றா?

ராஜம்:—போங்கள் அக்கா! எப்போதும் உங்களுக்குப் பரிகாசந்தான். மாதம் பிறந்ததும் அநுபவஞானக் களஞ்சியமான அமிர்த குணபோதினி வருமென்றுதான். அதைப் படிப்பதனால் அடையும் அறிவு விசாலமும் ஆனந்தமும் பிறிதொன்றிலுண்டோ?

சு. மு. சோக்கலிங்கம்.

# விதந்துவும் சாஸ்திரிகளும்.

பஞ்சாங்க சாஸ்திரிகள் :—தங்களுடைய பர்த்தா இறந்துபோய் ஒரு வருஷத்திற்கு மேலாகிறது. இன்னும் கேசத்தை வைத்துக்கொண்டிருப்பது அழகாயில்லை.

விதந்து :—நான் மயிர் வைத்துக்கொண்டிருக்கிறது அழகாயில்லையோ? அவலக்ஷண ரூபியாய் எதிர்ப்படுவோரின் மனத்திற்குப் பயங்கரத்தையுண்டுபண்ண வேண்டுமோ? உம்முடைய தலையிலும், உம்முடைய மனைவியின் தலையிலும் அருகன்கட்டைபோல் மயிர் இருப்பது வெகு கோரமாய் எனக்குக் காணப்படுகிறது. நீங்கள் இரண்டுபேரும் மொட்டையடித்துக்கொள்ளுங்கள்.

சாஸ்திரிகள் :— உங்களுடைய கேசம் அழகாயில்லையென்று நான் சொல்லவில்லை. புருஷனை இழந்தவர்கள் தலைமயிர் வைத்துக்கொள்ளலாகாது. அது அசாஸ்திரீயம். குடும்பத்துக்கு க்ஷேமகரமன்று.

விதந்து :—நான் மயிர் வைத்துக்கொண்டிருப்பது என் குடும்பத்துக்கு மகத்தான க்ஷேமத்தை விளைத்துக்கொண்டிருக்கிறது. தன் தந்தை இறந்தாலும் தன் மாதா கேசங்களுடன் பழய முகமே காட்டி நிற்பது தன் மனதுக்கு எவ்வளவோ சந்தோஷமென்று உத்தியோகத்திலுள்ள என் குமாரன் கூறுகிறான். நான் கொடுக்கும் தக்ஷிணையை வாங்கிக்கொள்ள உம்மைப்போல் வைதீகர்களான எத்தனையோ சாஸ்திரிகள் என் வீட்டுவாயில் காத்துக்கிடக்கின்றனர். என்னுடைய க்ஷேமத்துக்கு என்ன குறைவு? பதிபக்தியில் நான் குறைந்தவளல்ல. இனி இப்படி என்னிடம் உளறவேண்டாம். புருஷனை இழந்தவர்கள் தலைமயிர் எடுக்க வேண்டுமென்பது சாஸ்திரீயமோ? சாஸ்திரத்தை நீர் கட்டியழும். தரித்திரம் உம்மைப் பீடிக்கட்டும். நான் ஒருபோதும் முண்டனம் செய்து கொள்ளேன். உடன்கட்டையேறும் கொடிய வழக்கம் நின்றுபோயிற்று. சர்க்கார் தண்டிப்போமென்று சட்டமேற்படுத்தியதால் எல்லோரும் அக்கொடிய வாடிக்கையைத் தொலைத்தனர். இன்றைக்கு அப்படியே துரைத்தனத்தார் விதந்துகளுக்கு முண்டனம் செய்யக்கூடாதென்று ஒரு சட்டம் ஏற்படுத்தினால் அப்போது நீரும் உம்மைப்போன்ற இரக்கமற்ற பாபிகளும் என்ன செய்யக்கூடும்? ருதுவானபின் விவாகம் செய்யும் வழக்கத்தைச் சாரதா சட்டம் உண்டாக்கிக்கொண்டு வருகிறதே. அதற்கென்ன சொல்லுகிறீர்? நான் முண்டனம் செய்து கொள்ள இணங்காவிட்டால் நீரும் மற்ற பந்துக்களும் என்ன செய்யக்கூடும்? என்னைப் பலாத்காரம் செய்ய முடியுமா? இந்தியன் பினல்கோடிலுள்ள ஸெக்ஷன்கள் உங்கள் கழுத்தில் ஏறி உட்கார்ந்திருக்கின்றனவே, ஐயோ! என்ன மடமையான ஸம்பிரதாயமிது? விதந்துவின் கண், பரபுருஷனைப் பார்க்குமென்று அதை யாரேனும் பிடுங்கவேண்டுமென்று சொன்னால் நீதியாமா? இதைப் போலவே மயிரைச் சிறைத்துவிடவேண்டுமென்ற நீசபுத்தியுள்ள வைதீகர்கள் செய்யும் காரியங்களும் ஆலோசனையும் இருக்கின்றன. வைணவப் பிராமணர்களில் தென்கலைவகுப்பு மாதர்

---

அற்ப குணம் மிக்க கேவலம். அதிலும் வீட்டிலுள்ள பெரியோர்களை அற்பமாய் மதித்தலும், மணந்த கணவனை அற்பமாய் அலக்ஷியம் செய்தலும் தான் குட்டிச்சுவராவதற்கே வழி. கணவனின் கண்ணீர் வீணாகாது.

கள் கேசத்தை எடுப்பதே யில்லையே? அது ஏன் அசாஸ்திரீயமாகத் தோன்ற வில்லையோ? பிராயமே வந்தபோதிலுங்கூட நான் என் கேசத்தை எடுக்க மாட்டேன்.

சாஸ்திரிகள் :—அம்மா, தாங்கள் அப்படிச் சொல்லப்படாது. பூர்வீக ஸம்பிரதாயத்துக்கு விரோதம் செய்வது நலமல்ல.

விதந்து :—என் ஸம்பிரதாயமே எனக்கு இஷ்டம். அதற்கு நீர் விரோதம் சொல்லவேண்டாம். எனது தயவை ஆசிக்கிற நீர் எனக்குப் போதகாசிரியராக ஏற்படவேண்டாம். எனக்கு வேண்டிய விவேகம் இருக்கிறது. ரயில்வண்டி ஏறுவது ஸம்பிரதாயமோ? தந்தியடிப்பது ஸம்பிரதாயமோ? நசுக்கிப் பிழியும் வரதக்ஷிணை ஸம்பிரதாயமோ? இங்கிலீஷ் மருந்தைக் கண்டவர் தொட்ட ஜலத்துடன் கலந்து உண்பது ஸம்பிரதாயமோ? பள்ளிக்குச்செல்லும் உம்முடைய பிள்ளை இதர வர்ணத்துச் சிறுவர்களைத் தொட்டுக்கொள்வது ஸம்பிரதாயமோ? என் ஆந்தைபோல் விழிக்கிறீர்? முதலில் அந்த ஸம்பிரதாயங்கள் ஏற்பட்டதற்கு ஏதேனும் காரணம் சொல்லும்? பின்னர், என் தலைமயிரை வாங்கும்படி எனக்கு உபதேசிக்க வரலாம்.

சாஸ்திரிகள் :—அம்மா, கேசங்கள் இல்லாவிட்டால் நாலுபேர்கள் உங்களைக் கெட்ட எண்ணத்தோடு பார்க்க மாட்டார்கள். அதற்காகச் சொன்னேன்.

விதந்து :—பதினாயிரம் பேர்கள் என்னைக் கெட்ட எண்ணத்துடன் பார்த்தாலென்ன? என்னுடைய மனமன்றோ நிர்மலமாயிருக்கவேண்டும்? என் கண்கள் யாரையும் துரெண்ணத்தோடு நோக்கா. என் மனதை யடக்கியாளும் சக்தி எனக்கு உண்டு. பிராமணரல்லாதாரில் சிரமுண்டிதம் செய்யும் வழக்கமில்லை. அன்னோரின் சிந்தை தீயதிற் பாய்கின்றதா?

சாஸ்திரிகள் :—அப்படிப் பிடிவாதம் செய்தால் நாங்கள் உங்களுடைய கிருகத்துக்கு வரமாட்டோம். உங்களைக் கிராமத்தார் ஜாதிப்பிரஷ்டம் செய்வர்.

விதந்து :—என்ன சொன்னீர்? நீங்கள் என் வீட்டிற்கு வரமாட்டீர்களா? ஸதா பணம்பிடுங்கிகளாகிய நீங்கள் என் வீட்டிற்கு வாதிருக்க வேண்டுமென்பதே என்னுடைய பிரார்த்தனை. உங்களுக்குக் கொடுப்பதில் பாவத்தைத்தவிர எந்தப் புண்ணியமுமில்லை. மற்றவர்களுக்குப் புண்ணியம் தேடித்தருவதாக மயக்கிக்கொண்டு அந்த வழியில் உமது ஜீவனார்த்த வியாபாரத்தை நடத்திக் கொள்கிறீர். பீடைகளாகிய உங்களாலேயேதான் அநேக சிறிய பெண்கள் முண்டனம் செய்துகொண்டு ஆயுள் முடிய விகார ஸ்வரூபிகளாய் அவஸ்தைப்படுகின்றனர். அவர்கள் அழுத கண்ணீர் உங்களுக்குத் தரித்திரத்தை விளைத்து புண்ய மயக்குஜாலங்களைப் பிறருக்குப் போதித்து வயிறு வளர்க்கச்செய்தது. ஓய் பஞ்சாங்க சாஸ்திரிகளே! நீர் ஸ்மார்த்தன். உம்மை வைஷ்ணவன் பகிஷ்காரம் செய்திருக்கிறானே! அவன் வீட்டிற்குள் நீர் போய் பந்தியிலுட்கார்ந்து போஜனம் பண்ணுவீரா? முதலில் உமது விபூதி நெற்றியை வைணவன் பார்க்கவே ஸகிக்கமாட்டானே! உம்மைப் பிதிர்

---

கலகப்பட்டுக்கொண்டவர்கள் அதே வீட்டிற்குள் தான் இருந்தாலும், அவர்களின் உள்ளமோ எவ்வளவோ விஷம நினைவுகளை யெல்லாம் எண்ணி அதற்கான வழிகளை யெல்லாம் வெகுதூரம் ஆராய்கிறது.

சிரார்த்தத்திற்குப் பிராம்மணனாக வைஷ்ணவன் வரிப்பானா? இல்லை யன்றோ? அவன் உம்மைப் பிரஷ்டனாக மதிக்கிறான். நீர் அவனைப் பிரஷ்டனாக எண்ணுகிறீர். அது போல் நான் உம்மைப் பிரஷ்டனாக நினைக்கிறேன். இந்த நிமிஷமுதல் நீர் என் வீட்டுக்கு வரவேண்டாம். மகா பாபியாகிய உமக்கு 4-அணா கொடுப்பதைவிட யோக்கியனான வேறொரு பிராமணனுக்கு 1-ரூபாய் கொடுக்கிறேன். உமக்கு எதிரில் ஆயிரம் பிராம்மணர்களை வரவழைக்கிறேன் பாரும்.

சாஸ்திரிகள் :— அம்மா, ஐசுவரிய ஸம்பன்னையே! கோபிக்கவேண்டாம். நான் ஏதோ ஹிதமென்று எண்ணிச் சொன்னேன். உங்களுக்கு இஷ்டமானால் தாராளமாய் மயிர் வைத்துக் கொண்டிருங்கள். பிறருக்குக் கொடுக்கும் ஒரு ரூபாய் தக்ஷிணையை எனக்குக் கொடுக்கலாகாதா? நான் தாஸானு தாஸனாகக் காத்திருப்பேன்.

## மறுபடியும் உறவு பிடிக்க வருவது.

மனம் சலிக்க வைதுவிட்டும், வெறுத்துவிட்டும், கைவிட்டும், அடியோடு பழய அன்பை மறந்துவிட்டும், முற்றிலும் அன்னிய மனுஷ்யர்கள்போல் மாறிவிட்டும், தமது செல்வத்தின் அகங்காரத்தைக் காண்பித்துவிட்டுத் தூரப்போய்விட்ட புதுத் திமிர் பிடித்தவர்கட்குத் தாம் வெறுத்துவிட்டவர்களிடமே சில முக்கியமான வேலைகளுக்காக அடிக்கடி செல்லவேண்டிய அவசியம் நேர்ந்துகொள்கிறது. அப்பொழுது மறுபடியும் உறவுபிடித்து மயக்குவதற்காகத் தமது வீட்டின் க்ஷேமங்களையும், தமது பெண் பெரியமனுஷியானதையும், தமது குமாரனுக்குக் குழந்தை பிறந்ததையும் விவரித்துக் கடிதம் எழுதுகின்றனர். அக் கடிதத்தைப்பெறும் பழம்புண்ணாளிகளோ அதற்கு மதிப்பு வைக்காது ஒரு வெறுப்புச் சிரிப்பு சிரித்துவிட்டு அதை ஒரு மூலையில் எறிகின்றனர். பிறகு அந்தக் கடிதம் எழுதினோர் வருகையில், அக்கடிதத்தைப்பற்றிப் பழம்புண்ணாளிகள் பிரஸ்தாபிப்பதுமில்லை, கடிதத்திற்கண்ட வீட்டு விசேஷங்களை விசாரிப்பதுமில்லை. கடிதம் எழுதினோரும் புண்ணாளிகளின் போக்கைத் தெரிந்துகொண்டு எதையும் பிரஸ்தாபிக்காமல் மௌனக்கட்டைகளாய்விடுகின்றனர். மயக்கவோ, மறுபடியும் உறவுபிடிக்கவோ முடியாவிடினும், தாங்கள் அங்கு வந்த காரியத்தைப் பார்த்துக்கொண்டு போய் விடுவோமென்பதோடு திருப்திபட்டுக்கொள்கிறார்கள்.




# இராஜ சந்திரன்

## அல்லது—மறைந்த கைதி.

### அத்தியாயம்—1.

வீடு விற்பனையில் புதிய நிபந்தனை.

I



„ஓ! லாயர் கண்ணப்பனா? இப்போது ஏன் இங்கு வந்தாய்? என்னுடைய கடன்காரர் யாராவது என்மீது தாவா கொண்டுவந்து உன்னிடம் கொடுத்து நடவடிக்கை நடத்தும்படி கூறியிருக்கிறார்களா?"

கண்ணப்பன் :—தர்ம பூஷணமாகிய சபாபதி முதலியாரின் மீதும் வழக்கு கொண்டு வருவதா? அவ்விதம் ஒன்றுமில்லை. தாங்கள் ஏன் இப்படி மெலிந்து கிடக்கிறீர்கள்?

சபாபதி :—அப்பா! உன்னைக் கண்டு அதிக சந்தோஷ மடைகிறேன். நான் இப்போது கீல்வாயுவினாலும் மார்படைப்பினாலும் பீடிக்கப் பட்டிருப்பதால் வெளிச் செல்வதே கிடையாது. இந்தக் கொடிய நோய் எப்போதுதான் என்னை விட்டுத் தொலையுமோ தெரியவில்லை. இதற்காக நான் வைத்தியர் களுக்குக் கொடுத்த பணம் இவ்வள வவ்வளவல்ல. அது இருக்கட்டும்; நீ இப்பொழுது எதற்காக வந்தாய்?

கண்ணப்பன் :—நீங்கள் இப்போது வஸித்துவரும் சாரதா விலாஸத்தையும், அதைச் சார்ந்த நிலங்களையும் விற்றுவிட யோசிப்பதாக நான் கேள்விப்பட்டேன். அது விஷயமாய் உங்களை விசாரிக்க வந்தேன்.

சபாபதி :—(திடுக்கிட்டு) அப்பா! இது விஷயம் நாம் இருவரும் ரகசியமாய்ப் பேச வேண்டும். ஏனெனில், இவ்விஷயம் என் கடன்காரர்களுக்குத் தெரிந்தால் என் கைக்கு ஒரு காசும் வராது. உன்னை நம்பி உண்மையைக் கூறுவதற்கும் எனக்குப் பயமாய் இருக்கிறது. நீ லாயராசையால் எனக்குக் கடன் கொடுத்தவர்களுடைய ஏவுதலினால் உளவை யறிந்து கொண்டுபோக நீ வந்திருந்தாலும் இருக்கலாமென்று சந்தேகிக்கிறேன்.

கண்ணப்பன் :—அவ்வளவு கேவலமாக என்னை நினைத்து விடவேண்டாம். நான் அத்தகையோனல்ல. நீங்கள் சாரதா விலாஸத்தை விற்றுவிட யோசிப்பதாக என் சிநேகிதரொருவர் ரகசியமாக எனக்குச்

சொன்னார். நான் அதை வாங்கத் தீர்மானித்து உங்களிடம் வந்தேன்.

சபாபதி :—யாருக்காக நீ வாங்கப் போகிறாய்?

கண்ணப்பன் :-யாருக்காகவு மல்ல, என் சொந்தத்திற்கே வாங்கிக் கொள்கிறேன். என் தந்தை சம்பாதித்து வைத்த ஆஸ்தியும், என் தமக்கை தன் புருடன் வீட்டிலிருந்து கொண்டு வந்த சொத்துக்களும் என்னிடமிருப்பது உங்களுக்குத் தெரியாதா?

சபாபதி :—இது மிகவும் யோசித்துச் சொல்ல வேண்டிய பெரிய காரியம். என் பெண்ணின் கௌரவமும் இதில் சம்பந்தப்படுகிறது. நீ வாங்கிக் கொள்வதா யிருந்தால் எனக்கு மிகவும் திருப்தியே. விலையை உடனே கொடுத்து விடவேண்டும். எனக்குக் கடன் தொந்தரவுகள் சகிக்க முடியவில்லை. என் கடன்கள் தீர்ந்தாலன்றிப் பரகதி கிடையாது. நான் கடவுளுக்குப் பயந்தவன். இதை நான் விற்று விட்டதாகவாவது, நீ வாங்கிக் கொண்ட தாகவாவது என் உயிருள்ள வரையில் நீ வெளியிடலாகாது. அதுவுமன்றி நான் இந்த பங்களாவை விட்டு வெளியில் வசிக்கச் சென்றால் சந்தேகத்திற்கு இடமுண்டாகு மாதலால், என்னுயிருள்ளவரையில் இவ்விலாஸத்திலேயேஇருக்க உத்திரவும் தரவேண்டும். அத்துடன் மற்றொரு கஷ்டமான நிபந்தனைக்கும் நீ உட்பட வேண்டி யிருக்கிறது.

கண்ணப்பன் :—தாங்கள் பெரியவர்கள்; நன்றாக வாழ்ந்தவர்கள். தாங்கள் என்ன நிபந்தனை விதித்தாலும் சந்தோஷத்துடன் தலை குனியச் சித்தமா யிருக்கிறேன். விலையென்ன சொல்லுங்கள்.

சபாபதி :—சாரதா விலாஸத்தையும், அதைச் சேர்ந்த தோட்டங்களையும் ஐம்பதினாயிரம் ரூபாய்க்குக் கொடுத்து விடுகிறேன்.

கண்ணப்பன் :—அடடா! அதிக விலை.

சபாபதி :—வலியவே சென்று விலை கூறினால் எப்போதும் அதிகமாகவே காணப்படுவது வழக்கம்.

கண்ணப்பன் :—தயவு செய்து கண்டிதமான விலை கூறுங்கள்.

சபாபதி :—கண்டிதமாக ஐம்பதினாயிரம் ரூபாய்க்குக் குறையாது. நீ இதைக் கேட்க வருவாயென்று நான் கனவிலும் நினைக்கவில்லை. என் நிபந்தனைகளை ஏற்றுக் கொள்ளக் கூடியவர்களையே நான் கவலையோடும் தேடிக் கொண்டிருந்தேன். அந்த நிபந்தனைக்கு உட்படாமல், இதை ஐம்பதினாயிர மல்ல, ஐந்து லக்ஷம் ரூபாய் தந்தாலும் நான் சத்தியமாய் விற்கப் போவதில்லை. நான் விற்று விட்டாலும் என்கையை விட்டு இது போய்விடக் கூடாது என்பது என் தீர்மானம். என் புராதனர்கள் வசித்து வந்த இந்த சாரதா விலாஸம் என் சந்ததியாரிடமே இருக்க வேண்டு மென்பது என் விருப்பமாகும்.

கண்ணப்பன் :—விற்று விட்ட பிறகு தங்களுக்கு எப்படி சொந்தமாகும்? தங்கள் சந்ததியார் இதில் எப்படி வாசம் பண்ண முடியும்? தாங்கள் சொல்வது எனக்கு விளங்கவில்லையே.

சபாபதி :—அதுதான் என் நிபந்தனையின் ரகசியம். ஐம்பதினாயிரம் ரூபாய்க்கு இதை வாங்கிக் கொண்டா

---

*அடுத்த வருஷத்தில் முடித்துவிடலாமென்கிறார்கள். மூன்று மாதத்துக்குமுன் நம்மிடம் குலாவியவன் இன்று இவ்வுலகினிலில்லை.*

லும், அதை என் குமார்த்தியின் பேருக்கு எழுதிவைத்து விடக்கூடியவர்களுக்கே நான் இதை விற்க முடியும்.

கண்ணப்பன் :—வெகு வேடிக்கை! ஐம்பதினாயிரம் ரூபாய்க்கு ஒருவன் இதை வாங்கிக் கொள்வதாவது, பிறகு இதை உங்கள் குமார்த்திக்குத் தானமாய்க் கொடுத்துவிடுவதாவது? இப்படிச் செய்யச் சம்மதிக்கிறவன் சுத்த பைத்தியக்காரனாகத்தான் இருக்க வேண்டும்.

சபாபதி :—அவ்வித பைத்தியக் காரனையே நான் தேடிக் கொண்டிருக்கிறேன். சீக்கிரம் அவ்விதமான ஒரு பைத்தியம் பிடித்தவன் எனக்குக் கிடைக்கக் கடவுள் கிருபை புரிவார்.

கண்ணப்பன் :—தாங்கள் சொல்வது ஒன்றும் தெரியவில்லை. சற்று விவரமாகச் சொல்லுங்கள்.

சபாபதி :—என் வார்த்தைகளின் கருத்து உனக்கு விளங்க வில்லையா? இதை வாங்குகிறவர்கள் உத்தமர்களாகவும், தங்களின் பெற்றோர்களுடைய அநுமதியைப் பெற்றவர்களாகவும், வாலிபர்களாகவும் இருக்கவேண்டும்.

கண்ணப்பன் :—அப்படி யென்றால் அதன் பொருள்தான் என்ன?

சபாபதி :—இதை வாங்கிக் கொள்வோர் என் குமார்த்தி கமலவல்லியை விவாகம் செய்து கொள்பவர்களாகவும், அவள் பேருக்கு இதை எழுதி வைக்கச் சம்மதிப்பவர்களாகவும் இருக்கவேண்டும். நான் என் குமார்த்தியின் வீட்டிலிருந்தபடியே கடவுளைச் சேரவேண்டும். இதுவே என் நிபந்தனை. இதற்கு வாங்கிக் கொள்பவரின் பெரியோர்களும், பெற்றோர்களும் மனமொத்துச் சம்மதித்தாலன்றி நான் ஒப்பமுடியாது.

கண்ணப்பன் :—ஒகோ! அப்படியா? இப்போது தங்களின் நிபந்தனைகளைத் தெரிந்துகொண்டேன். என் தமக்கையே இப்பொழுது என் குல தேவதையாகும். அவரைக் கலந்து கொண்டு யோசித்து முடிவை உங்களுக்குத் தெரிவிக்கிறேன்.

சபாபதி:—இதில் வீட்டு விக்கிரயத்துடன் விவாக காரியமும் சம்பந்தப்பட்டிருக்கிறது. நீ மிகவும் தகுதியுள்ள வாலிபனே என்பதைநான் அறிவேன். எதிலும் அவசரப்படாதே. விவாக காரியம் மகா பெரிய விஷயம். மெதுவாக நிதானித்து யோசித்தபின் உன் இஷ்டத்தைத் தெரிவிக்கலாம்.

இந்த சமயம் ஓர் அழகிய பெண் இவர்கள் பேசிக்கொண்டிருக்கும் அறையினுள் நுழைந்து சபாபதி முதலியாரைப் பார்த்து, "நான் இன்றையதினம் அத்தை வீட்டிற்கு விருந்திற்காகப் போகிறேன்" என்று கூறிச் சென்றாள். அவள் போய்விட்டதும் சபாபதி கண்ணப்பனை நோக்கி, "அவள் தான் என்னுடைய புத்திரி. அவள் பெயர் கமலவல்லி. அவளுக்கு ஆஸ்தி வைப்பதற்கு என் கையில் பணமில்லை. அவள் இதுகாறும் அதிக செல்வாக்குடனே வளர்க்கப்பட்டவள். சாரதா விலாஸத்தை நான் விற்று விட்டால் அவள் கதி யென்னவாகுமோ என்று தான் இந்த நிபந்தனை ஏற்பாட்டைச் செய்திருக்கிறேன். இனி ஈசன் செயல். என்னுடன் பிறந்த ஓர் தங்கை இவ்வூரிலிருக்கிறாள். அவளுடைய பெயர் கனகாம்புஜம். அவளு

சிலர் எடுப்பார் கைப்பிள்ளையா யிருக்கிறார்கள். எவர்கள் எதைச் சொன்னாலும் நம்பிவிடுகிறார்கள். மனைவியின் வார்த்தையையோ, தாயின் வார்த்தையையோ கேட்டுக்கொண்டு தள்ளுகிறவர்கள் எவ்வளவோ பேர்.

டைய புருஷன் பெயர் கோவிந்த முதலியார். அவள் வீட்டில் இன்று விருந்துண்பதற்காக என் புத்திரி போகிறாள்" என்றார்.

சற்று நேரம் கண்ணப்பன் பேசிக்கொண்டிருந்து, நாளையதினம் சகல விஷயமும் ஏற்பாடு செய்வதாகக் கூறிப் போய்விட்டான்.

ஃ

சபாபதி முதலியார் இப்பொழுது வயோதிகர் போலவே காணப்படினும் அவர் அதிக விருத்தாப்பிய ரல்ல. வயது ஐம்பதிற் குள்ளிருக்கும். அவரது மனைவி காலஞ்சென்று விட்டதிலிருந்து உண்டான வியாகூலமே அவர் தேகத்தை இப்படிக் கெடவைத்தது. உலக வழக்கத்தின்படி மறு விவாகம் செய்து கொள்ளவில்லை. முதல்மனைவிக்கு சமமான தங்கக் கட்டியை இவ்வுலகில் பெறுவது ஒரு போதும் சாத்தியப்படா தென்று சொல்லி மறு விவாகத்தை மறுத்து விட்டார். அன்றியும், தன் புத்திரி கமலவல்விக்கு மேலாக இருந்து எவரும் அதிகாரம் செய்யக் கூடாதென்பதும் அவர் கொண்ட எண்ணம். மாற்றாந் தாய்களின் மூலமாக மக்கள் படும் வாதனையை அவர் நன்கறிந்திருந்தார்.

பௌரிங்குப்பேட்டையில் சபாபதி முதலியா ரென்றால் தெரிந்து கொள்ளாதவர்கள் யாருமில்லை. அவர் தன்னிடமிருந்த திரவியத்தைச் செலவிட்டு ஏராளமான அன்ன சத்திரங்களும், தர்ம கலாசாலைகளும், தண்ணீர்க் குழாய்களும் கட்டியிருப்பது மன்றி, பணத்தை விருதாவில் சில வழிப்பதற்குச் சற்றேனும் பின்வாங்குவதேயில்லை. அவர் இவ்விதமாகத் தன்னிடமிருந்த ஆஸ்தியில் ஏராளமானவற்றைச் செலவழித்து விட்டார். அவர் கீல் வாய்வினால் வாதனைப்பட்டுக் கொண்டிருக்கிறபடியால் தாராளமாக நடக்க முடியாது. இப்போது அவர் தன் ஆஸ்திகளை யழித்து விட்டதுமன்றி கடன்காரர் வசமுமகப் பட்டு விழிக்கின்றார். அவரிடம் தற்சமயம் தான் குடியிருக்கும் பங்களாவாகிய சாரதா விலாஸமும் (Saradha Vilas) அதைச் சார்ந்த தோட்டங்களும் தவிர வேறு ஆஸ்தியே கிடையாது. அதையும் விற்றுக் கடன்காரர்களின் தொந்திரவை யொழித்து விடலா மெனில், அப்பால் இவரை நம்பி கடன்கொடுப்பாரெவரு மில்லாமற்போய்விடுவார்க ளாகையால், அதை இரகசியமாகவே விற்பனை செய்துவிட வேண்டுமென்று தனக்குத் தெரிந்தவர்களிடத்தில் கூறி யிருந்தார்.

ஃ

லாயர் கண்ணப்பனுக்கு வயது இருபத்தைந்திருக்கும். அவனுடைய கரிய கூந்தலும் நீண்டமுகமும் அவனழகைப் பெருக்கிற்று. அவன் சுமார் ஐந்தரையடி உயரமும் அதற்கேற்ற பருமனுமாகவே யிருந்தான். பெரியோரிடமேனும் சிறியோரிடமேனும் அதிக வந்தனமாகப் பணிந்து பேசுவான். சதா சிரித்த முகத்துடனே யிருப்பானதலால் இவனிடம் பேச எல்லோரும் ஆவல் கொள்வார்கள். இவனுடைய தந்தை ஓர் பிரபல வக்கீலாயிருந்து இரண்டு வருடங்களுக்குமுன்னர் இறந்துவிட்டார். இவனுடைய தாய் இவனையும் மூத்த சகோதரியாகிய சுகுணவதி யென்பவளையும் பிரிந்து அநேக வருடங்களுக்கு முன்னரே இறந்து விட்டாள். சுகுணவதி ஓர் டாக்டருக்கு

சுயநலம் அதிகமாகப் பெருகி வஞ்சகமனத்தினரானோர் தங்களின் உண்மையான நண்பர்களை இழந்துவிடுகிறார்கள். அதற்காக அவர்கள் கவலைப்படுவதுமில்லை. அவர்களின் நோக்கம் பணம் சேர்ப்பதே. பணமே நண்பன்

வாழ்க்கைப்பட்டாள். அவர் இறந்து விட்டபடியால் அவளும் கண்ணப்பனுடன் நைன் ரீப்ஸ் (Nine Reefs) என்ற ஊரில் வசித்து வருகிறாள். கண்ணப்பன் வக்கீல் பரீட்சையில் தேறி அலுவல் பார்த்து வருகிறான். இவன் மிகவும் சாமர்த்தனனபடியால் போதுமான வரும்படி கிடைத்து வந்தது. இவனுக்கு இன்னம் விவாகமாகவில்லை. ௐ

கமலவல்லி வண்டியேறித் தன் அத்தை வீட்டையடைந்து உள்ளே சென்றாள். அச்சமயம் கனகாம்புஜம் காப்பி சாப்பிட்டுக்கொண்டிருந்தாள். அப்போது கமலவல்லி "நான் அதிக நேரம் சென்று வந்தேனே?" என்று கேட்டாள்.

கனகாம்புஜம் :—ஆம், ஆம், நீ வருவாயென்று இதுவரையில் காப்பி சாப்பிடாமல் காத்திருந்தோம்; நீ வராமையால் போஜனத்திற்கு வருவாயென நினைத்துக்கொண்டோம். இதோ இவ்விடத்தில் உட்கார்ந்து காப்பி சாப்பிடு. ஏன் இவ்வளவு நேரமாயிற்று என்று கேட்டுக்கொண்டேயிருக்கையில் ஓர் வாலிபன் இவர்களருகே வந்து கமலவல்லியைக் கண்டதும் சந்தோஷமடைந்தவனாகி "நீ எப்போது வந்தாய்" என்று கேட்டான். இவனுடைய பெயர் பலராமன். கனகாம்புஜத்தின் ஏகபுத்திரன். இவன் கல்வி கற்க மனமில்லாமல் அலங்காரமாக உடுத்திக்கொண்டு திரிந்துவந்தான். ஏகபுத்திரனெனக் கருதி இவனுடைய தாய் தந்தையர் இவனிஷ்டப்படி நடந்துவந்தார்கள். இவன் கூறியதைக் கேட்ட

கமலவல்லி :—நான் அதிகாலையிலேயே எழுந்து உடுத்திக்கொண்டு பிரயாணப்படச் சித்தமாயிருந்தேன்.

கனகாம்புஜம் :—பின்னர் ஏன் நேரமாயிற்று?

கமலவல்லி :—யாரோ ஒருவர் தகப்பனாரிடம் வெகு நேரம் பேசிக்கொண்டிருந்தபடியால், நான் தகப்பனாருக்குக் கூறிவிட்டுவர அதிக நேரம் காத்திருந்தும் அவர் போகாமையால் தைரியமாக உள்ளே சென்று தகப்பனாருக்குக் கூறிவிட்டு வந்தேன் என்றாள்.

அச்சமயம் எதிரேயிருந்த பலராமன் கமலவல்லி கழுத்திலணிந்திருந்த ஓர் இரவைப் பதக்கத்தை நோக்கி, "இப்பதக்கம் மிகவும் அழகாயிருக்கிறது. உயர்ந்த இரவைகளிழைக்கப்பட்டிருக்கிறபடியால் அதிக பிரகாசமாகவு மிருக்கிறது. இதைக் கழற்றிக் காண்பி, பார்ப்போம்" என்றான். கமலமும் அதைத் தந்தாள்.

பலராமன் அப்பதக்கத்தை நன்றாகத் திருப்பித் திருப்பிப் பார்த்துவிட்டு கமலவல்லியிடம் கொடுத்தான். அவள் தன் வலது கையில் ஓர் கைக்குட்டையை வைத்திருந்தபடியால் இடது கையில் வாங்க முயன்றாள். அச்சமயம் திடீரென அப்பதக்கம் கைதவறிக் கீழே விழுந்துவிட்டது. அதினின்றும் மூன்று இரவைகள் பெயர்ந்துவிட்டதுமன்றி ஓர் இரவை இரண்டாய்ப் பிளவு பட்டுவிட்டது. இதைக் கண்டதும் கமலவல்லிக்கு அதிக விசனமுண்டாகி முகம் மாறுதலடைந்துவிட்டது. கண்களினின்றும் நீர்த்துளிகள் மெதுவாக வந்தன. பலராமன் உடைந்த பதக்கத்தையும் இரவைக் கற்களையும் சேகரித்தெடுத்து "கமலா இது யாருடைய தப்பு. நான் ஜாக்கிரதையாகவே உன்னிடம் கொடுத்தேன். நீ அசட்டையாக இடது கையில் வாங்க எத்தனித்துக் கைதவறிக் கீழே விட்டுவிட்டாய்" என்றான். அச்சமயம் கனகாம்புஜம் அப்பதக்கத்தினை வாங்கிப்பார்த்து, அடடா! உடைந்துவிட்டதே கமலா, இதற்காக நீ ஏன் அழு

கிறாய், தட்டானிடத்தில் கொடுத் தால் கற்களைப் பழயபடி பதித்துவிடு வான். ஒரு கல் மாத்திரம் உடைந்து விட்டபடியால் வேறே வாங்க நேரும் என்றாள். கமலா தன் கண்ணைத் துடைத்துக்கொண்டு, நான் அஜாக்கி ரதையாகக் கீழே விட்டு விட்டேனாத லால் வேறு யார்மீதும் குற்றமில்லை என்று கூறி அப்பதக்கத்தை வாங்கித் தானணிந்திருந்த குச்சுவைத்த சமிக்கி பச்சை ஜாக்கட்டின் ஜேப்பி யில் வைத்துக்கொண்டாள், அப் போது,

பலராமன்:—ஏன் அதை ஜேபியில் வைத்துக்கொள்கிறாய், கழுத்திலணிந் துகொள்ளலாகாதா? என்று கேட் டான்.

கமலவல்லி:-உடைந்த பதக்கத்தை போட்டுக்கொண்டிருப்பதை யாரா வதுகண்டால் நகைக்கமாட்டார்களா?

பலராமன்:-நகைப்பானேன்? கீழே விழுந்து கற்கள் பெயர்ந்துவிட்டன வென்று கூறலாகாதா என்றான். அப் போது கனகாம்புஜம் கமலாவை நோக்கி, விவாகமாகாத பெண்ணின் கழுத்தி லொன்றுமில்லாம லிருக்கலா காதாகையால் பதக்கத்தை யணிந்துக் கொள்ளும்படி கூறினாள். கமலாவும் அப்படியே செய்தாள்.

அப்பால் போஜனமுண்டபின் கமலவல்லி விடைபெற்றுத் தன் வீடு சேர்ந்து பிதாவிடம் பதக்கத் தைக் காட்டி விசனமடைந்தாள். அவர் அதற்கு, "அம்மா, இந்தப் பதக் கம் உடைந்துவிட்டதற்கு அதிகமாய் வருத்தப்பட்டுவிட்டாயோ என்று கலங்குகிறேன். நான் எங்கே கோபிப் பேனோ என்றும் நீ அஞ்சியிருக்க லாம். தவறுதல் என்பது மனிதர்க ளுக்கு அடிக்கடி நேரிடக்கூடியதே. ஒவ்வொரு தவறுதலினின்றும் மனி தன் உயர்ந்த படிப்பினையைக் கற்றுக் கொள்கிறான். தவறுதல் துக்கமாயி னும் கடவுள் அதிலிருந்தும் ஒரு நன் மையைத் தோற்றச் செய்கிறார். இந் தப் பதக்கம் உடைந்ததற்கு எத்த னையோ பொய்க் காரணங்களைக் கூறித் தப்புவித்துக்கொள்ளும்படி பலராமன் உனக்குக் கூறியதை அப்ப டியே என்னிடம் பாடம் ஒப்புவித்து உள்ள உண்மையைத் தெரிவித்து விட்டாய். பரிசுத்தமான உன்னு டைய ஹிருதயம் பொய் பேசத் துணியவில்லை. பலராமனோ பொய்க்கு அஞ்சவில்லை. இச்சிறு சங்கதியி லிருந்தே உன் குணத்துக்கும் அவன் குணத்துக்கும் பொருத்தமில்லை யென்பதை நீயே நேரில் கண்டு கொண்டாய். இது உனக்குப் பெரிய படிப்பினை. உன்னை விவாகம் செய்து கொள்ள அவன் தகுதியுடையவ னில்லை. என் கண்மணி! எனது ஸகல சொத்துக்களும் உனக்குத் தானே சொந்தம். அதில் இந்தப் பதக்கம் காலில் ஒட்டிய தூசிக்கு சமம். ஆதலின், இது கெட்டுவிட்ட தென்று வருத்தப்படாதே" என்று அன்புடன் கூறினார். பிறகு வேறு இரவை வாங்கி அதனை ஒரு தட்டா னிடம் கொடுத்து சரியாக்கிவிட்டார்.

கமலவல்லி போய்விட்ட பின் பல ராமன் தன் தாயிடம் சென்று, அவளை தான் விரும்புவதாகவும், தனக்குத் தவறாமல் அவளையே மணஞ்செய்து வைக்கும்படியாகவும் கூறினான். அவன் தாய் அவ்வாறே செய்வதாக வாக்களித்ததால் அதிக சந்தோஷத்துடனிருந்தான்.



தாயற்ற குழந்தைகளுக்கு அவர்களது அன்னையின் ஞாபகம் உண்டாகி விடும்போது கல்நெஞ்சும் கரையும். பிரித்துவிட்ட தெய்வமும் இரங்கும்.

## அத்தியாயம்—2.

### தந்தையும் குமார்த்தியும்.



வக்கீலின் வீடு பெரிய வக்கீல்களான குமாஸ்தாக்களால் சூழப்பட்டு நிற்கும். நீதிஸ்தலத்தில் தீர்ப்பு பெறுவதற்கு முன்பாகவே கக்ஷிக்காரர்கள் தங்களுக்கு வெற்றி கிடைத்து விட்டது போல் ஸந்தோஷப்பட்டுக் கொள்ளுகிற இடம் இதுதான். கக்ஷிக்காரர்களின் குடும்பத்தை உருப்படச் செய்கிறதும், ஸர்வ நாசமாக்குவதுமான புண்ணிய ஸ்தலமும் இதுவே. லாயர் கண்ணப்பன் எப்பொழுதும் உண்மையுள்ளதாயும் ஜெயிக்கக் கூடியதாவுமுள்ள வழக்குகளையே பெறுவது வழக்கம். அதனுல் அவனுக்கு எங்கும் நல்ல பிரக்யாதி ஏற்பட்டிருந்தது. கண்ணப்பன் தன் ஆபீஸ் அறையில் ஏதோ எழுதிக் கொண்டிருக்கையில் அவனுடைய குமாஸ்தாவான தனபாலன் அங்கு வந்தான். அவனிடம் சில காகிதக்கட்டுகளைக்கொடுத்து அதுவிஷயமாக சில பத்திரங்களும் மனுக்களும் எழுதும்படிக் கூறி யனுப்பிவிட்டான்.

அவன் போய்விட்ட பின் ஓர் வேலைக்காரன் ஓடி வந்து எதிராஜன் என்பவர் உங்களைக் காண வந்திருக்கின்றுர், அவரை உள்ளே விடட்டுமாவென்று கேட்டான்.

அவரை மாலையில் வந்து பார்க்கும்படி சொல்லியனுப்பிவிடு நீ போய் கருணவதியையும் தனபாலனை யழைத்ததாகத் தெரிவி என்று கண்ணப்பன் கூறினுன்.

சற்று நேரத்திற்கெல்லாம் இருவரும் வந்து சேர்ந்தார்கள். கண்ணப்பன் அவர்களை நோக்கி சாரதா விலாஸமும் அவற்றைச் சார்ந்த தோட்டங்களும் விற்பனைக்கு வந்திருக்கின்றன. என்ன விலை கொடுத்து வாங்கலா மென்பதைக் கூறுங்கள் என்றுன்.

சுகுணவதி:—சாரதா விலாஸமா விற்பனைக்கு வந்திருக்கிறது? உனக்கு யார் சொன்னது என்று கேட்டாள்.

கண்ணப்பன் :—எனக்கு ஒருவர் இரகசியமாகக் கூறினுர். நான் சபாபதி முதலியாரிடம்சென்று விசாரித்ததில், அவர் உண்மையில் விற்றுவிடத் தீர்மானித்திருப்பதாகவும், விற்பனை இரகசியமாக இருக்கவேண்டு மென்றும் கூறினுர்.

சுகுணவதி :—அவர் என்ன விலை கூறினுர்.

கண்ணப்பன் :— ஐம்பதினுயிரம் ரூபாய்க்குக் குறையாதென்கிருர்.

சுகுணவதி :—நல்ல விலை தான். அதற்குக் குறைந்து யாரும் கொடுக்க மாட்டார்கள்.

கண்ணப்பன் :— அப்படியானுல் ஐம்பதினுயிரம் ரூபாய் கொடுத்து வாங்கிவிடலாமென்கிருயோ?

சுகுணவதி:— தடையில்லாமல் வாங்கி விடலாம். அவர் விற்கிற சங்கதி வெளியில் தெரிந்தால் இன்னம் அதிகமான தொகை கொடுத்து வாங்க அநேக பிரபுக்கள் முன் வருவார்கள் என்றுள். தனபாலனும்ஐம்பதினுயிரம் ரூபாய்க்கு வாங்கிவிடலாமெனச் சம்மதித்தான். கண்ணப்பன் நாளைய தினம் சென்று ஐம்பதினுயிரம் ரூபாய்

கொடுத்து சாரதாவிலாஸத்தை வாங்கி விடுவதாகவும், இது சங்கதி மர்ம மாகவே யிருக்கவேண்டு மென்றும் தெரிவித்தான். பிறகு தனபாலனை அனுப்பிவிட்டு சுகுணவதியுடன் பேசத் தொடங்கினுன்.

கண்ணப்பன் :—அக்கா, சாரதா விலாஸத்தை நாம் வாங்கிக் கொள்வ தில் ஒரு சிக்கல் இருக்கிறது. அதை விலைக்குப் பெற்று மறுபடியும் அவர் களுக்கே கொடுத்து விடவேண்டு மென்று நிபந்தனை. இதற்கு உட்படா விட்டால் சாரதா விலாஸம் நமக்குக் கிடைக்காது.

சுகுணவதி :—அந்த நிபந்தனைக்கு நாம் உட்பட வேண்டியதுதான். சபாபதிமுதலியார் மகாசத்தியவந்தர். பரம தயாளு. அவர் பிரியப்படி சிறு வயதினரான நாம் நடக்க வேண்டி யதே. கிரயத்துக்குப் பெற்று மறு படியும் அவருக்கே கொடுத்துவிட வேண்டு மென்றால், அவருடைய புத் திரி கமலவல்லிக்கு சாரதா விலாஸத் தைத் தந்து விடவேண்டு மென்று பொருளா? அவ்வாருனுல், கமல வல் லியை நீ மணந்து கொண்டால்தான் சாரதா விலாஸத்தைத் தர முடியு மென்று சொல்லுகிருரா?

கண்ணப்பன் :—அக்கா, உனக்கு புத்திஸூக்ஷ்மம் அதிகம். எவ்வளவு சுலபமாக விஷயத்தைக் கிரகித்து விட்டாய்? உன்னவ்வளவு மூளை எனக்கு இல்லையே.

சுகுணவதி:—பாவம்! அவர் என்ன செய்வார்? கடன் தொல்லை ஒரு பக் கம்; தனது கண்ணுக்குக் கண்ணை குமார்த்தி பிறகு கண்கலங்கா திருக்க வேண்டுமே யென்ற கவலையொரு பக் கம். ஆதலின் இவ்விதமாக நிபந்தனை விதித்தது அவரது ஆழ்ந்த யோசனை யைக் காட்டுகிறது. கமலவல்லி தங்க விக்கிரகம். அவள் உனக்குக் கிடைத் தால் நீ பாக்கியசாலிதான். என்னை யும் வீட்டை விட்டுத் தூரத்தமாட் டாள். அவளுடைய பாத நிழலில் என் காலத்தை ஸந்தோஷ மாகவே கழித்து விடுவேன். அவளைப்போன்ற உத்தமி இந்தக்காலத்தில் கிடைப்பது கஷ்டம். உன் அதிர்ஷ்டம் எப்படி யிருக்கிறதோ?

கண்ணப்பன் :—அக்கா, உனக்கு சம்மதமானல் எனக்கும் சம்மதமே. நீ சம்மதித்தாய் என்று தெரிந்தால் தான் அவர் ஒப்புவார். ஆனதால் நீயும் என்னுடன் வந்து நிபந்தனைகளை ஒப் புக் கொள்வதாகச் சொல்லவேண்டும்.

சுகுணவதி :—கரும்பு தின்னக் கூலியா? எப்போது அழைத்தாலும் வரக் காத்திருக்கிறேன்.

கண்ணப்பன் :—விவாக விஷய மாய்ப் பேச எனக்கு நாணமாயிருக் கிறது. நீ தனியாகவே சென்று அவ ரைப் பார்த்து வருவது நல்லது.

என்றான். சுகுணவதியும் அன்று மாலை புறப்பட்டுச் சபாபதி முதலியா ரிடம் சென்று கமலவல்லியுடன் பேசிக் கொண்டிருந்தாள். சபாபதி முதலியார் தனக்கும் கண்ணப்பனுக் கும் நடந்த ஸம்பாஷணைகளைச் சொல்லி உன் சம்மதம் என்ன அம்மா என்று கேட்டார். சம்மதப்பட்டுத் தானே நான் இங்கு வந்திருக்கிறேன். என்று சுகுணவதிகூற, முதலியாரும் சந்தோஷமாய், இனி நான் கவலை இல்லாமல் கடவுளிடம் போய்ச் சேர முடியும். எதற்கும் தனக்குப் பெரி யவளாய் வீட்டில் ஒரு தமக்கை யிருப் பது ஒரு வக்கீல் வீட்டில் இருப்பதற் குச் சமமே. அந்த விஷயத்தில் கண் ணப்பன் அதிர்ஷ்டசாலிதான் என் முர். அதன்பின் சுகுணவதி கமல வல்லிதந்த சிற்றுண்டிகளைப் புசித்து விட்டு விடை பெற்றுச் சென்றாள். கண்ணப்பனிடம் தான் போய்வந்த விஷயங்களை விவரமாய்த் தெரிவித் தாள்.

(தொடரும்.)

# சிறு பொருள்கள்



,,சிறு துரும்பும் பல்லுக்குத்த உதவும்." எவ்வளவு சிறிய பொருளாயினும், அதனை நாம் அலக்ஷியமாயெண்ணி ஒருபோதும் உபேக்ஷை செய்யலாகாது. ஒரு சமயத்தில் அணுவாயிருப்பதுதான் மற்றொரு சமயத்தில் மலையாகிவிடும். அற்பமாய் ஆரம்பிப்பதெல்லாம் வெகுவாய்க் கடைசியில் சிறப்பாக முடிவுபெறக் கண்டிருக்கிறோமல்லவா? உலகத்திலுள்ள பொருள்கள் அனைத்தும் சிறுபொருள்களால் உரு அமைந்தவையேயாம். அற்பமான பல துளிகள் சேர்ந்து அகாதமான பெருவெள்ளமாகின்றனவல்லவா? ஆயிரமாகாணி அறுபத்திரண்டரையல்லவா? பல அணுக்கள் ஒன்றுசேர்ந்துதானே ஒரு பெருமலையாகின்றது. நிமிஷம் நிமிஷமாய்ச் சேர்ந்துதானே ஒரு மகா காலமாகின்றது. அந்தக் காலம் இரக்கை கட்டிக்கொண்டு பறப்பதுபோல் வெகு வேகமாய்ச் சென்று கழிந்து போகின்றதாதலால், எதையும் நாம் அற்பமென்று அலக்ஷியம் செய்யாமல் ஜாக்கிரதையாயிருக்கவேண்டும்.

ஃ

நம்முடைய மனது எத்தன்மையது தெரியுமா? உலகத்தில் தீய பொருள்கள் அநேகமுண்டு; ஆயினும், மனதைப்போல அவ்வளவு தீயது வேறொன்றுமில்லை. எவ்விதமான கெட்ட எண்ணங்களும், கெட்ட செய்கைகளும் மனதினின்றுமே உற்பத்தியாகின்றன. பெரிய பெரிய மரங்களெல்லாம் சிறிய வித்தினின்றுமே யல்லவோ முளைத்து வளருகின்றன. அதுபோலவே பெரிய துன்பங்களெல்லாம் ஒரு அற்பமான கெட்ட எண்ணத்தினின்றுமே விளைகின்றன. நிலத்தில் விதை எவ்வாறு அழுந்துகின்றதோ, அவ்வாறே கெட்ட எண்ணம் மனதில் உறுதியாய்ப் பதிந்து போகின்றது. அது முளைத்தெழுந்து முற்றிப் போனால், பிறகு அதைப் பிடுங்கி எறிவது மிகவும் அசாத்திய மாகின்றது.

ஃ

பல நிமிஷங்கள் கூடியே நமது வாழ்நாளாகின்றது. வெகு சொற்ப காலமாகிய கண்ணிமைப் பொழுதே நிமிஷமென்னப்படும். ஆயினும் அவற்றில் ஒரு நிமிஷத்தைக்கூட நாம் உபேக்ஷை செய்து வீணே கழித்துவிடலாகாது. ஏனெனில், அவற்றுள் எத்தனை நிமிஷங்கள் நமக்குச் சொந்தமோ அது நமக்கு இப்போது தெளிவாய்த் தெரியாதல்லவா? நூறு வயதான கிழவர்கள் இரண்டொருவர் இறந்துபோனால், இளம் பருவமான சிறுவர்கள் ஆயிரம் இரண்டாயிரம் பேர் இறந்து போகிறார்கள். எப்படியாயினும் ஆறிலும் சாவு, நூறிலும் சாவுதான்; அதற்குத் தப்புகிறவர் ஒருவருமில்லை. குமாரனாயினும், கிழவனாயினும், பயங்காளியாயினும், தைரியசாலி யாயினும் எல்லோரும்

---

சகல கலைகளும் கற்றுத் தேர்ந்தவர்கள் இருக்கிற இடம் தெரியாமல் பரம சாதுக்களாயிருக்க, அரைகுறை தெரிந்தவர்கள்தான் பண்டிதர் என்றும், வித்வான் என்றும் அதிக ஆடம்பரம் செய்ய முன்வந்துவிடுகிறார்கள்.

அதற்கு ஒன்றுதான். பற்பல கலைகளிலும் வல்லவர்களாய்க் கல்விக் களஞ்சியமான புலவர்களும் தமது கற்றறிவுடனே காடு சேர்கிறார்கள்; முதலெழுத்து மறியாத மூடர்களும் தம் மடமைத்தனத்துடனே மரண மடைகிறார்கள். எவ்வளவு செல்வ மிருப்பினும், செல்வாக்கு இருப்பினும், ஒன்றும் மரணத்தினின்றும் நம்மைக் காப்பாற்ற வல்லதன்று. ஆதலால், நமதுவாணாளின் பகுதிகளாகிய நிமிஷங்களைக் கழிப்பதில் நாம் வெகு ஜாக்கிரதையாய் இருக்கவேண்டும். அந்த நிமிஷங்கள் நமக்குப் பேரின்ப விளைவுக்கு வழியாயினுமாகும்; என்று மொழியாத துன்பத்தைத் தருவதற்குக் காரணமாயினும் ஆகும். மரணமானது மண்டலேசுவரர்களான மன்னவர்களையும் மாள்விக்கும் மகிமையுடைய தென்றால், அதற்கு அஞ்சி நிமிஷங்களை நல்வழியில் கழிக்காமல் வீணிற் கழிப்பவர்களுடைய விவேக மின்மையை என்னென்று சொல்லலாம்? ஆதலால், அற்பமென்று எதையும் இகழலாகாது. பெரியமலைகளை உடைப்பது சிற்றுளியோ செம்மட்டியோ? ஆயிரம் பதினாயிரம் விலை பெறுவது குன்றுமணி யளவான வைரக்கல்லோ, கோபுரத்தளவான கூழாங்கல்லோ?

## பழக்கம் வெகு கொடியது.



சில மாதர்கள் தங்களின் முக்காடிட்ட சேலையின் நுனியைவாயில்வைத்துக்கொள்வர். அது அசங்கிதம்என்று தோற்றுவதில்லை. தமது மேஜைக்கு அருகிலேயே எச்சில் துப்பும் கிண்ணத்தை வைத்துக்கொண்டு அதில் ஸதா துப்பியபடியும் கிடப்பர். துவைத்து மூன்று நூற்றாண்டுகளான வஸ்திரத்தையே மேலே போர்த்தும் அணிந்தும் சிலர் செல்வர். அதிலுள்ள அழுக்கு அவர்களுக்குத் தோற்றுவதில்லை. இவ்விதமே பொடி, சுருட்டு முதலியவற்றில் பழகினோரும் தாம் செய்யும் அசங்கிதச் செயல்களை யுணர்வதில்லை. பழகிவிட்ட வகையில் அதிலுள்ள குற்றம் தெரிவதில்லைபோலும்! ஒருதடவை துடைப்பம் எடுத்துத் தம் மனைவியை அடிக்கத் துணிந்த கை மறுபடியும் அத்துடைப்பத்தையே எடுத்துக்கொண்டு சிங்காரிக்கப்போவதும் பழகிவிட்ட பழக்கத்தின் கொடுமையேதானே?

வேலை செய்யச் சக்தியற்றவர்களுக்கு எந்த உதவியும் செய்வதில்லை. ஆனால், சோம்பித் திரிபவர்களையோ அதிகமாகத் தாங்கி அவர்களுக்கே ஸகல உதவியும் செய்கிறார்கள்.

சிலர் கருமகிரியைகளைப் பந்து ஜனங்கட்குத் தெரிவித்தால் அதிக செலவாகுமென்று எவரையும் அழைக்காமல் தங்கள் வீட்டுடன் நடத்திக் கொண்டு சிக்கனமாய்விடுகிறார்கள். இறந்த நாளில் மட்டுமே அழைப்பு.

# தற்கால அன்பர் உலகம்.

1. போலிக் கற்களை விலைக்குப் பெற்றுவிட முடிவதுபோல போலி நண்பர்களையும் அதிசுலபமாகப் பெற்றுவிட முடியும்.

2. நடிப்பளவில் உன்னுடைய சிநேகிதர்களில் எத்தனையோ பேர் இருக்கலாம். எல்லாம் ஒரு காரிய சமயத்தில் வெட்டவெளிச்சமாய்விடுவதைக் காண்பாய்.

3. கடலிலிருந்து எடுக்கப்படும் முத்துச்சிப்பிகளிலெல்லாம் முத்துகளிருப்பதில்லை. ஒரு சிலவற்றிலேயே இருக்கமுடியும். அதுபோல உனது நண்பர்களிலும் எத்தனையோ பேர் ஆழ்ந்த அன்பற்றவர்களா யிருக்கலாம். பெயரளவில் முத்து யில்லாததையும் கூட முத்துச்சிப்பியெனக் கூறுவதேபோல், ஆழமறியாமல் அனைவரையும் அன்பரென்றே எண்ணுகிறாய்.

4. சிற்றுண்டிச்சாலைக்கும் படக் காக்ஷிசாலைக்கும் செல்ல உன்னை எதிர்பார்க்கும் நண்பர்களை உன்னால் எத்தனை நாளைக்குத் திருப்திசெய்ய முடியும்? உண்மை அன்பு பிரதிப் பிரயோஜனத்தைக் கருதுவதில்லை.

5. பணத்திற்காக ஒருவரை நேசிப்பதா? குணத்துக்காக ஒருவரை நேசிப்பதா எனக் கேட்டால் பணத்திற்காகவென்றே தற்காலத்தில் விடை கிடைக்கும்.

6. பழத்தை அறுக்க உபயோகப் படும் கத்தியே மனிதனை நமன் உலகனுப்பவும் உதவுகிறது. அதுபோல உண்மையாகத் தென்பட்ட தோழர்களே ஒருகாலத்தில் உயிருக்கு ஹானி விளைவிப்போரா யிருப்பர்.

7. பலமரம் கண்ட தச்சன் எப்படி ஒரு மாமும் வெட்டுவதில்லையோ அதுபோல தினமும் ஒரு நண்பரைத் தேர்ந்தெடுக்கும் அல்ப மனிதரிடம் உண்மை அன்பைக் காணமுடியாது.

8. நிதானம் எனும் குன்றின்மீது ஏறி, ஆராய்ச்சி எனும் விளக்கைக் கொண்டு நேசமெனும் புதரைச் சோதனையிட்டுஅதனுள் நுழையுங்கள். நீங்கள் 'மான்' என்று எண்ணிப் போக, அதில் மறைந்துகிடப்பது கொடிய சிறுத்தையா யிருக்கலாம்.

9. தற்கால நேசர் உலகில் கபடமெனும் பாசம் மறைந்துகிடக்கிறது. அதில் மனம் சென்றவாறு பிரயாணம் செய்து வழுக்கி விழவேண்டாம்.

10. பின் வருவனவற்றைப்பற்றி இப்போது அக்கரையில்லை. இப்போது கண்ணுக்கு இன்பமாய்த் தென்படும் பொன்மானைத் தொடர்ந்தே ஓடுவோமெனத் தற்கால பிரதர் கூட்டங்கள் கூறுகிறது.

11. தற்கால நேசர் உலகம் நாகரீகமாக உடையணிந்தோரை நமஸ்கரிக்கிறது. உண்மையான இதயத்தை அறியும் உள்வலி அதற்கில்லை.

12. தற்கால அனபர் உலகத்தின் இதயம் சமுத்திரம்போன்று விரிந்திருக்கலாம். ஆனால், அவை தாகத்துக்கு உதவுவதல்ல. உப்பு நீரை அருந்துவாருமுண்டோ?

13. தற்கால அன்பர் உலகில் உண்மை அன்பர்களைக் காணமுடிகிறதா? இல்லை. எங்கோ ஒருவரிருக்கலாம். எனவே, எல்லோரையும் அன்பரென்றெண்ணிஐயோ! அநியாயமாக மோசம் போகவேண்டாம்.

14. நீங்கள் தேர்ந்தெடுக்கும் அன்பரின் இதயம் மேகங்களற்ற வானத்தைப்போன்றதா யிருக்கட்டும்.

15. உங்கள் மனம் எப்போதும் திறந்திருக்கவேண்டாம். அப்படித் திறந்திருப்பின் அதில் மாசு போன்ற அன்பர்கள் வாடகையின்றியே குடியேறிவிடுவர். (தொடரும்.)

M. P. துரைசாமி நாடார்.

# சென்ற மாதம்

"மெய்வருத்தம் பாரார், பசிநோக்கார் *** கருமமே கண்ணயினர்"

**எளிய நிலையி னின்றும் உயர் வுற்ற பெரியார்.**

என்பதற்கு இணங்க, இப்பொழுது பிரான்ஸின் புதிய குடியாசுத் தலைவராகத் தெரிந்தெடுக்கப் பட்டுள்ள மிஸ்டர் டூமர் என்பவர் தமது முயற்சியாலேயே முன்னுக்கு வந்தவராவார். இவருக்கு இளமை யிலேயே வறுமை. ரெயில்வேயில் கொத்து வேலையிலிருந்த தந்தை இவாது குழந்தைப் பருவத்திலேயே காலமானார். அன்னையோ காலை முதல் இரவுவரையில் கூலிவேலை செய்து வயிறு வளர்ப்பவள். இந்த இழிய நிலையில் மிஸ்டர் டூமர்வளர்ந்து வந்து 14-வயதில் சித்திரவேலையாளிடம் அமர்ந்து ஜீவித்து, தமது முயற்சியால் தொழிற் கல்வியும் ரஸாயன சாஸ்திரமும் பயின்று, கிரேக்க லாட்டின் பாஷைகளில் தேர்ச்சியும் அடைந்தார். பின் தன் நண்பனின் ஸகோதரியை மணக்க விரும்பினர். அந்தப் பெண்ணின் பிதாவோ ஆசிரியராக வேலைக்கு அமர்ந்தால் பெண்ணைத் தருவதாகக் கூற, அவ்விதமே ஆகட்டு மென்று இடைவிடாது உழைத்து 20-வது வயதில் கணித ஆசிரியராகி, முன் குறித்த பெண்ணையே மணந்துகொண்டார். மிஸ்டர் டூமருக்கு இப்பொழுது 74-வயதாகிறது. இந்த வயதில் தற்போது மறுவிவாகமும் செய்துகொண்டார். சுருட்டு, மதுபானம் இவற்றை அறியார். 5-மணிநேரமே தூக்கம். இரவில் வெகுநேரம் வேலை செய்கிறார். காலையில் 5.மணிக்கு எழுந்து விடுவார். வியாதி என்று அவர் படுத்ததே கிடையாது. இன்றைக்கும் திடகாத்திர தேகியாய் உள்ளார். எல்லா பாக்கியத்துடன் இப்பொழுது குடியாசுத் தலைவருமாகி யிருக்கிறார். இது விதியின் அமைப்பு.

ஃ

**தன் குழந்தையைக் கொன்ற தந்தை!**

"பட்டகாலிலே படும்" என்பது போல, வீட்டிலிருந்த எருமையை விற்றுவிடும்படியாக நேர்ந்து, அதில்கிடைத்த நூறு ரூபாய் நோட்டை மனைவியிடம் தரப்போக, அவளோ விதிவசத்திற்கேற்ப ஒரு கூடையில் அதைப் போட்டுவைக்க, அதை நோட்டு என்று அறியாத குழந்தை நெருப்பிலே எடுத்தெறிந்துவிட, பணம் போய்விட்ட ஆத்திரத்திலே தந்தை குழந்தையை வெட்டிக் கொன்றுவிட, போலீஸார் அவனைக் கைது செய்து விட்டனர். ஒரு குடும்பம் சின்னாபின்னமாகி விட்டது. கெட்டவேளை வரும்பொழுது அதற்கேற்படி எல்லாம் கூடிக் கொள்கிறது. இது குஜாத் என்ற இடத்தில் நடந்தது.

ஃ

---

எப்படியோ பணம் சேர்த்தவனை உலகம் மதிக்கிறது. நூறுநூறாகச் சம்பாதித்துச் செலவிட்டவனையோ ஏளனம் செய்கிறது. எனக்கெனத் தனிச் செலவாக எப்போது செய்தான் என்று கேட்டுத் தூற்றுகிறார்கள்.

### தமிழகத்தில் காங்கிரஸ் மறியல் வேலை.

"அவன் கேட்டான் குடிகாரன் எனக்கு இரண்டு திராம் வாரு" என்பதுபோல, மதுபானத்தின் தீமைகளை உபதேசிப்பவர்களைவிட, அவற்றைக் குடிப்போர் நன்கறிந்திருக்கிறார்கள். ஆயினும், குடித்துப் பழகிய வழக்கம் இடையில் வைராக்கியமாக விட்டுவிடினும் மீண்டும் ருசி பார்க்கவே புத்தி போகிறது. கதரின் அவசியமும், அதை ஆதரிக்கவேண்டுமென்பதும் அறியாதாரில்லை. எனினும், அந்நியத்துணிகளில் பழகிவிட்ட பழக்கம் சுலபத்தில் பல தேசாபிமானிகளுக்கும் தொலைய மாட்டேனென்கிறதாம்! கதரின் அவசியத்தைப்பற்றி நூல் எழுதிய ஆசிரியர் உயர்ந்த சீமை மல் உடுத்து விளங்குவதும் வழக்கத்தின் கொடுமையே. தமிழ் நாட்டில் காங்கிரஸ் மறியல் வேலை நடந்து வருகிறது. மறியல் செய்வோர் தங்களைச் சேர்ந்தோரையும் திருத்தப் பார்ப்பது முதல் வேலையா யிருக்கவேண்டும்.

ஃ

### பண்டித ஜவ்ஹர்லாலின் தென்னிந்தியப் பிரயாணம்.

"தோன்றிற் புகழோடு தோன்றுக" என்றவாறு ஜெயப் பிரதாபசீலராய் விளங்கும் பண்டித ஜவ்ஹர்லால் நேரு தென்னிந்தியாவில் சுற்றுப் பிரயாணம் செய்து திரும்பினார். தலைப்பாகை தரிக்காத வெறுந்தலைகளை இங்கு பார்த்து அவர் அதிசயப்பட்டிருக்கலாம். இன்னும் பல ஆசாரணைகள் விநோதமாகவும் பட்டிருக்கும். ஸ்ரீலஜபதிராய் தமது தென்னிந்திய சுற்றுப் பயணத்தில் இவ்விடத்தியவர்கள் அன்றன்று வாழையிலையில் புசித்து எறிந்து விடுகிற பெரிய ரகசியத்தை அறிந்து கொண்டார். நமது ஜவ்ஹர்லால் என்னென்ன இரகசியங்களை இங்கு கண்டு கொண்டனரோ? நாம் கொண்டாடுகிறவர்கள் அனைவரும் வட நாட்டினராகவே யுள்ளார். விவேகானந்தர், மகாத்மா போன்றவர்கள் வட நாட்டினரே! ஸ்ரீ கிருஷ்ணன், ஸ்ரீராமபிரான் இவர்களும் வட தேசத்தார் தான்!!

ஃ

### நகைகளுக்காகக் குழந்தையின் கொலை.

"பொன்னை நினைத்தார் புவிமிசை ஆட்கொல்லி யென்பார்." அதுபோல், தேவகோட்டையில் 13—வயதுள்ள தனவைசியச் சிறுமியை அவள் அணிந்திருந்த ஆயிரம் ரூபாய் நகைகளுக்காகக் கொன்று புதைத்து விட்டனராம்! இந்தப்பெண் நன்கு படித்துப் பொன் வெள்ளி மெடல்கள் பெற்றவளாம். அழகுக்கு நகையணிவிக்கப்போய் ஆபத்தாய் முடிகிறது. நகை யணியாத குழந்தை காணமற்போயிற்றெனில் அதைப்பற்றி அதிக கவலையில்லை. அக்குழந்தை கடைசியில் வீடுவந்து சேர்ந்து விடுகிறது. அக்குழந்தையைத் தீய நினைவுடன் நோக்குபவருமில்லை. நகைகள் தரித்த குழந்தை காணவில்லை யெனிலோ—?

---

ஆயிரம் ரூபாய் கடன் கேட்டதற்கு உடனே ஒருவர் ஒப்புக்கொள்கிறார். காரணம் அந்த மனிதனை நன்றாகத் தெரிந்திருப்பதாலேயே. கடவுளுக்குப் பயந்தவனை நம்பலாம்.

# தத்துவ ஞானம்

1. ஞானத்துக்கும் ஆத்மாவுக்கும் மூதன்மையானது அறிவு.

2. உணர்ச்சி அறிவுக்குள்ளானது.

3. செய்கைகள்மனதிலுதிப்பன.

4. மனது எல்லாவற்றையும் ஆளுகிறது. அறிவினின்று உதயமாகி முன்னிற்கிற எண்ணங்களை ஞானம் ஆளுகிறது. மெய்யுணர்ச்சிகள் மனதால் ஆளப்படுகிறது. ஆனல், மனது ஞானத்தால் ஆளப்படுகிறது.

5. மானிடதேகம் அப்பு, தேயு, பிருதிவு, வாயு, ஆகாயம், என்னும் பஞ்சபூதங்களாலாக்கப்பட்டு அறிவினாலாளப்படுகிறது.

6. ஞானத்தில் தேர்ச்சியடைந்தவர் மரணவாதை யடையார்.

7. ஞானம் யோகத்தினல் பெறப்படும்.

8. ஞானத்தில் குறைவுள்ள யோகி தேர்ச்சி பெறமுடியாது.

9. ஒழுக்கமுள்ளவன் யோகி.

10. எதை விதைத்தையோ அதையே அறுப்பாய். பிறரை நீ வஞ்சித்தால் தெய்வம் உன்னை வஞ்சிக்கும். வாழ்வு உன் நற்செய்கையிலே. தாழ்வு உன் தீய செய்கையிலே.

P. S. சுந்தர சுப்பிரமணியம்.

# மூளைக்கு விருந்து.

சென்ற வைகாசிமாத சஞ்சிகையில் 147-ம் பக்கத்தில் வெளிவந்தவைகட்கு விடை:—

1. முதல் மரக்கலத்தில் 7-மூட்டைகள். இரண்டாவது மரக்கலத்தில் 3-மூட்டைகள். மூன்றாவது மரக்கலத்தில் 2—மூட்டைகள்.
2. 420.
3. 5½-மணிக்கு மேற்றிசை அடிவானம் இருக்கும் நிலை.
4. மிதிலை, மாருதி, பவானி, மனைவி, மூக்கு, முகாரி.
5. திருவாவினன்குடி (திருவானைக்கா)
6. நள்ளாரிக்கு கால்கள் நான்கு.
   இல்லை கிள்ளைக்கு இருபது கால்கள்.
   உண்டு ஆலரசு அத்திக்கு துவர்.
   இல்லை சிங்கத்திற்கு இறகு.
7. பென்சில்.
8. காகிதத்தில் மசி கொண்டெழுதி வாசித்தல்.
9. காக்கை தவக்கையைப் பிடித்து முருங்கையில் வைத்துத் தின்றது.
10. மூட்டை.
11. வயல்.
12. பனகம் (மலை,)
13. சந்திரன். சிறகு. பல். பார்ப்பார். முட்டையிற் பிறப்பன.
14. உண்டு. கொக்கென்ற பெயர் குதிரைக்கும், வேங்கையென்ற பெயர் பொன்னிற்குமாம்.




"சென்னை லோகல் போர்ட்ஸ் ஆக்ட்" :—

[திருவள்ளூர் வக்கீலும், அகில இந்திய லா ஜர்னல் பத்திராசிரியருமான ஸ்ரீமான் M. S. பார்த்தசாரதி ஐயங்காரவர்கள் B. A. B. L., இயற்றியது. டிம்மி 1x8 அளவில் 320-பக்கங்களுள்ள உயர்ந்த பதிப்பு விலை ரூ. 2.]

1930-ம் வருஷத்தில் பெரிய மாறுதல்களை யடைந்த லோகல் போர்ட் சட்டமானது மிகவும் சுலபமான நடையில் வெகு தெளிவாய் மொழி பெயர்க்கப் பட்டுள்ளது. இத்தகையதோர் புஸ்தகம் ஸ்தலசுய ஆட்சியில் ஈடுபட்டிருக்கும் கனவான்கள் யாவருக்கும் அத்தியந்த உபயோக முள்ளதாகும். இப்புஸ்தகத்தின் முதலில் லோகல் போர்ட் சட்டத்தின் சாராம்சத்தை அதிகமான விவரங்களுடன் எடுத்துக் காட்டப் பட்டுள்ளது. அழகிய மொழிபெயர்ப்பும், சுத்தமான பதிப்புமே இப்புஸ்தகத்தின் முக்கிய முயற்சியாகும். ✤

ஸ்திரீதனம் :—

இதுவும் ஸ்ரீமான் M. S. பார்த்தசாரதி ஐயங்கார் அவர்கள் B. A; B. L. இயற்றியது. டிம்மி 1x8 அளவில் 48—பக்கங்களுள்ள உயரிய பதிப்பு. விலை அணா. 8.

இது ஒரு அருமையும் பெருமையும் வாய்ந்த நூல். சட்ட நிபுணரா யுள்ள பெரியார் இயற்றிய நூல். விசேஷித்த ஆராய்ச்சிகளுடன் கூடிய நூல். இத்தகையதோர் புஸ்தகம் எமக்குத் தெரிந்தவரையில் இது காறும் வெளிவரவில்லை. ஸ்திரீதனம் என்பதென்ன?—அத்தகைய சொத்துக்களை எவ்வாறு கண்டறிவது?—அவைகளின் வார்சு விதாயம் என்ன?—இவைகளைப்பற்றி இதன் ஆசிரியர் ஸ்மிருதிகளி லிருந்தும், முக்கியமான சட்டத் தீர்ப்புகளி லிருந்தும் வெகு ஸ்வாரஸ்யமாகத் திரட்டிச் சேர்த்து மிகவும் அழகாக விளக்கி யுள்ளார். வியவஹாரங்களில் சிக்கிக்கொள்ளாம லிருக்க சட்ட நுட்பங்களை யறிந்து வைப்பதற்கு இந்நூல் பேருதவியாகும். வியவஹார ஞானமும் பெருகும். அறிவு வளர்ச்சிக்கும் இந்நூல் துணைக் கருவியாகும். ஸ்ரீமான் பார்த்தசாரதி ஐயங்காரவர்கள் இவ்வித நூல்களின் மூலமாய் சட்ட ஞானத்தைத் தமிழ் நாட்டினருக்கு ஊட்டிவரும் பரோபகாரமான பெருமுயற்சியை மிகவும் பாராட்டுகிறோம். இந்நூலை வாசித்த பின்னரே இதன் அருமை விளங்கும்.

✤

ருத்ர நாட்டியம் :—

[ஸ்ரீமான் கோவிந்தராவ் குர்ஜாவி அவர்கள் இயற்றியது. டபிள் கிரவுன் 1x16—ல் 120—பக்கங்கள். விலை அணா 8.

வீரச் சொற்களுடன் அமைந்த சரித்திர சம்பந்தமான நாவல். சுயநலப்பேய் பிடித்துச் செய்யும் தவறுகள் திடுக்கிடக்கூடியவை. அமினாவின் கற்பும், பதிபக்தியும், அவளது தேச வாஞ்சையும், துரோகியான தந்தையை விட்டு விலகித் தன் குமாரனுடன் படும் பாடும் கல்மனத்தையும் கரையவைக்கும்; இது சாமான்ய

காவலன்று. சரித்திரச் சார்பான உணர்ச்சிகளை யூட்டவல்ல நூல். ஆனால், நூல்முற்றிலும் சோகபாகமே. இன்பத் துளிகளை விடுவதற்கு இதில் சிறிது இடமுங் காணேம்.

சுகுணவதி :—

[ஸ்ரீமான் மாந்தை—சா. கிருஷ்ணய்யரவர்கள் இயற்றியது. எட்டு ஹாப்டோன் படங்களுடன் கூடியது. உயர்ந்த காகிதப் பதிப்பு. டபில் கிரவுன் 1x16-ல் 184-பக்கங்களுள்ளது. விலை ரூபாய் 1.]

பல பெரியோர்களின் நல்லபிப்பிராயங்களுடன் கூடிய இக்கதையைச் சிறுவர் சிறுமியர்கள் அனைவரும் ஸந்தோஷத்தோடும் வாசித்து இன்புறுவர். அவர்களுக் கென்றே இது ஆக்கப் பட்டுள்ளது. சிறுவர்களின் மனத்தில் சிக்கலான கற்பனைகளடங்கிய கதைகள் எளிதிற் பதிவதில்லை. அவர்களின் சக்திக் கேற்றபடி கிரகிக்கும் தன்மையில் கதையின் போக்கு செல்வதுடன் நடையின் உயர்வும் அழகிய பதங்களின் ஜோடினையும் மிகு விருப்பத்தை யூட்டும். படங்களின் அழகிய தோற்றமும் சிறுவர்க்கு நல்விருந்தாகும். பாடசாலைப் பாட புஸ்தக மாக்குதற்கு இது ஏற்ற கதையாகும். அதிக ஸாகஸமும், விசேஷித்த சூழ்ச்சிகளும் நிறைந்த கற்பனைகளை விரும்புவார்க்கென்று இது எழுதப்படாமல் இளைஞரின் அன்பைப் பெறுவதற்காகவே வரையப் பட்டுள்ளதாகும்.

## பெண்கல்வியில் மூன்றுவகை சாதனங்கள்.

கல்விப்பயிற்சியின் பயனாக ஒரு பெண்ணுக்கு அவள் தன் வாழ்நாட்களை இதமாயும், மனோகரமாயும் கழித்துக் கொள்ளும்படியான சாதனங்கள் அமையப்பெறவேண்டும். அச்சாதனங்களை மூன்று வகையாகப் பிரித்துக் கூறவேண்டும். அதாவது, கலாசாலையில் கல்விப்பயிற்சி யடையும் காலம்; விவாகத்திற்குமுன் வீட்டில்கழியும் காலம்; விவாகத்திற்குப் பின்னர் கணவன் பிள்ளைகுட்டிகளுடன் கழிக்கும் காலம். இந்த மூன்றுவிதமான காலங்களிலும் ஒரு பெண் பூரண சுயேச்சையுடன் சுகவாழ்வைப் பெறவேண்டும். அப்படியிருந்தால்தான் அவள் அடையும் கல்விப் பயிற்சியின் உண்மை லக்ஷியங்களை யுணர்பவளாவாள்.

மனைவி தன் கணவனை மயக்குவதைவிட ஒரு குமார்த்தி தன் தந்தையை மயக்கி எவ்வித மறுப்போ சண்டையோ இல்லாமலே தனக்கு வேண்டியவற்றையெல்லாம் பெற்றுக்கொண்டுவிடுகிறாள். அவள் கேட்டதைத் தராவிட்டால் தந்தையின் மனம் சமாதானப்படுவதில்லையாம்.




# காபி ஹோட்டல் தமாஷ்!



நத்து புல்லாக்கு, என்னையும் பாரு, நான் நடக்கிற நடையையும் பாரு—என்று குலுக்கி பிலுக்கி மினுக்கி தளுக்குகள் செய்வது எது தெரியுமா? வெகு பேர்கள் நான் தவறாமல் யாத்திரை செய்யும் புண்ணிய க்ஷேத்திரத்தின் பெயர் என்ன அப்பா? பலர் ஒன்று கூடுகிற மகாசபை எங்கே யிருக்கிறது? ஆசார சீர்த்திருத்த வேடிக்கைகளை எந்த இடத்திலே காணலாம்? "எத்தனை பேர் நட்ட குழி, எத்தனை பேர் தொட்ட முலை, எத்தனை பேர் பற்றியிழுத்த இதழ்" என்று தெரிந்துங்கூட அந்தத் தாசி மோக ஞங்கியை விடமுடியாத மனதோடு அவள் அக்கிரமத்திற்கெல்லாம் உட்பட்டு அவளையே சுற்றிக்கொண்டிருப்பதுபோல, எத்தனையோ எச்சில் கசுமாலங்களையும், வாந்திஎடுக்கத்தக்க எண்ணித்தொலையாத ஆபாசங்களையும், பணத்தைப் பெற்றும் இலவசத்தில் எடுத்துக்கொடுப்பதுபோல நடிக்கும் ஜெகஜாலப்புரட்டுகளையும் சகித்துக் கொண்டு தாசி வீட்டுக் கட்டில்கள் போலநினைத்து நாற்காலியிலும் பெஞ்சிலும் போய்க் குந்துகிறார்களே அந்தத் திருப்பாடல் பெற்ற ஆலயம், மங்களாசாசனம் கண்டருளிய கோயில்—எது தெரியுமோ?—அதுதாண்டா அப்பா காபி ஹோட்டல்கள்! எச்சிலைக்கூடங்கள்!! விகடன் சகித்து சகித்துப் பார்த்தேன்! என்னையும் தாளமுடியாமல் பொங்கிக்கொள்ளவே எல்லாவற்றையும் இங்கே கொட்டித் தள்ளிவிடப் புறப்பட்டுக்கொண்டேன்! கேட்கிறீர்களா என் தர்ம துரைகளே! ஃ

காபிஹோட்டலாகியகோயிலிலே காலையில் வயிற்றைக் கழுவும் உற்சவமொன்று நடந்து வெகுபேர் ஆட்டுமந்தைகள் கூட்டம்போலக் கும்பல் கும்பலாய் வெளியே வருகிறார்களய்யனே! பிறகு இடையிலுள்ள காலங்களிலும் காபி கோயிலிலே ஓயாத திருவிழாதானப்பா! காபி ஸ்வாமிக்குத் திரைபோடுவதே கிடையாது! வந்தவர்களுக்கெல்லாம் காபி மலையாளபகவதியின் மகா தரிசனம் சுடச்சுட உடனே கிடைத்துவிடுகிறது! பிறகு மாலை நேரம் சந்தியா வந்தனகாலம் வருகிறதடா அப்பா! மறுபடியும் ஆட்டுமந்தைக் கூட்டங்கள்போலக் காபி கோயிலுக்குள்ளே

நுழைந்து தரிசனம் கண்டுகொண்டு திரள்திரளாக வெளியில் கிளம்பும் விநோதக் கூத்துகளை விகடன் என்னென்று சொல்லுவேன்! விடியற் காலம் நாலுமணி வேளையிலே தாசிச்சி அம்மாக்கள் தங்களிடம் வந்த மாப்பிள்ளைகளையெல்லாம் தட்டி எழுப்பி வெளியில் அனுப்புவது போல, இந்தக் கா(ல்)பீ அம்மாக்களும் காலையிலும், மாலையிலும் தங்களின் கண்ணாளர்களுக்கு இன்பம் தந்து வெளியில் அனுப்புகின்ற வேடிக்கையே வேடிக்கை!

ஃ

ஒருவன் ஒரு பூதத்தை வசியம் செய்துகொண்டானும்! அது அவன் இட்ட ஏவல்களையெல்லாம் செய்து வந்ததாம்! ஒரு நாள் அவனுக்கு மிக மிகப் பசியாம்! உடனே பூதத்தைத் தனக்கு உணவு கொண்டுவரும்படி சொன்னானும்! ஊரிலே உலகத்திலே காணாத பக்ஷண தினுசுகளையெல்லாம் தட்டு தட்டுகளாகக் கொண்டுவந்து அந்தப் பூதம் வைத்ததாம்! வெகு சந்தோஷத்தோடு ஒவ்வொரு தட்டாக ருசிபார்த்து வெகுநேரம் நக்கினானும்! சாப்பிடுவதுபோலிருக்கிறதே தவிர, வயிறு நிறைந்தபாடாகக் காணுமாம்! பசியும் அடங்கவேயில்லையாம்! ஓ! இது மாய்கை! மாயா விநோதம் என்று தெரிந்துகொண்டு ஏ! பூதமே! பசியடங்கிவிட்டது போதும் என்றானும்! உடனே எல்லாம் மறைந்துவிட்டதாம்! அப்படிப் போல, இந்தக் காபி கோயில்களிலே எவ்வளவு பணத்தைச் செலவிட்டு வயிற்றுக்குள் நுழைத்தாலும் ஏதோ பெண்ணின்பம்போல் அந்த நிமிஷத்திற்கு ஒருவித சாந்தியேதவிர, அடுத்த நிமிஷத்திலே மறுபடியும் பசி தோன்றிக்கொள்கிறதப்பா! வயிறு நிறைந்தபாடாகக் காணுமைய்யனே! வீட்டில் இத்தனை கஞ்சிச்சோறு சாப்பிட்டதிலுள்ள ஒரு மேலான திருப்தியும், பசியின் தணிவும் ஏதேது இங்கு தென்படுவதேயில்லை தெய்வமே!

ஃ

பழயநாளிலே, ஏண்டா அப்பா, இந்த நாளிலும்கூட குடித்துவிட்டுக் கெட்டுப்போகிறானென்று சொல்லும் வார்த்தை சாதாரணமா யிருக்கிறதல்லவோ! நம்ம ஸ்வராஜ்ய காங்கிரஸ் குட்டித்தெய்வங்கள் இப்போமதுவிலக்குப்பிரசாரம் செய்யப்புறப்பட்டிருக்கிறார்களல்லவோ! கள்ளுக்கடை, சாராயக்கடை மறியல்கள் செய்யப் புறப்பட்டு ஏதோ இப்போதே ஸ்வராஜ்யம் கிடைத்துவிட்டதுபோல் ஆரவாரம் செய்கிறார்களல்லவோ! அந்த வெறிக் குடியிலேகூட அத்தனை காசு பணங்கள் செலவாவதில்லை! இந்தக் காப்பி ஹோட்டல்களிலே என்னூரு தடபுடல்சாமிகள் செலவிடும் பணத்தை எண்ணிப் பார்த்தால் வெறிக்குடியின் செலவு ஒரு கோவணத்துணியத்தனை தானிருக்கும்! நித்தம் ஒருவரின் வயிற்றுக்குக் காலையிலே நாலணா, மாலையிலே நாலணாவாக எட்டணா செலவானல், மாதம் 15-ரூபாய் ஒருவன் வயிற்றுக்குள்ளேயே புகுந்து கொள்வதானல் அவன் குடும்பம் உருப்படுவதெப்படி? குடும்ப சம்பாத்தியத்தின் முப்பது ரூபாயில் பதினைந்து ரூபாய் ஒருவனுடைய ஒண்டி வயிற்றைக் கழுவுவதற்கு காபிஹோட்டலில் செலவாகிவிட்டால் அக்குடும்பத்தின் மற்ற செலவுகளுக்குப் பணம்

---

அறிமுகஸ்தர்களை வழியில் கண்டால் பற்களைக் காட்டியபடியே நடந்து போய்விடுவதுதான் அவர்களுக்குச் செய்யவேண்டிய உபசாரம். அவர்களுடைய கபடமான ஒப்பாரி அன்பின் லக்ஷணத்திற்கு அவ்வளவு உபசாரம் போதும்.

வெகு திண்டாட்டந்தானே! விகடன் போட்ட நாலணு கணக்கு வெகு சின்ன பிச்சைக்காரக் கணக்கு! இதிலும் பெரிய கணக்குகள் எவ்வளவோ! ஒருவன் பலருக்கு வாங்கி ஊற்றுகிற கணக்கு எவ்வளவோ! இந்தக் காபி ஹோட்டல்கள் என்கிற பகிரங்கக் கள்ளுக்கடையிலாகிற செலவுகளைத் தினை வெறிபிடிக்கும் கடையான கள்ளுக்கடையில் ஆகமாட்டாதே! கள்ளு சாராய வெறியைப்போல் காபி—டீ வெறியும் ஒரு பெரிய சண்டாளத்தனமான வெறியே அப்பா! காபிஹோட்டல்களிலே நாலணு செலவிடுகிறதற்குப் பதிலாக வீட்டிலே முக்காலணு செலவிட்டால் வயிறு நிறைந்து விடுமே! இந்த நாலணு செலவிலே ஒருகுடும்பம் முழுதுக்குமே வயிருறப் புசித்துக்கொண்டுவிடுமே! காபி ஹோட்டல்களில் கூடும் நாகரீகர்களைப் பார்த்தால் என்னூரு வயிறு காய்ந்தவர்களையெல்லாம் வெகு வெகு பணக்காரச் சீமான்கள்போல நினைத்துக் கொள்ளும்படியல்லவோ இருக்கிறது! கூலிக்கு முதுகுநோக மூட்டை தூக்கியவனுங்கூடக் காப்பிக்கடைக்கு ஓடுகிறுனே! ஐயோ! காபி வெறியே! விபரீதமே!!

ஃ

காபியிலே ஊற்றுகிற பாலு என்ன பாலடா தம்பி! அது எருமைப் பால்தான் அண்ணு! அந்தப் பாலிலே இடையன் விட்டதண்ணீர் முந்தியே சேர்ந்து நிற்க, அதோடு காபிஹோட்டல் அப்பாக்கள் ஒரு குடம் பாலுக்கு ஒரு குடம் தண்ணீரைத் தாராள மனதோடும் கலந்துவிடுகிறுர்கள்! இதிலே பால் கண்டச் சுண்ட மறுபடியும் மறுபடியும் ஊற்றுகிற சொம்புத்தண்ணீர் வேறே யிருக்கிறது! காலையிலிருந்து இரவு பத்துமணி வரையும் அடுப்பிலேயே காய்ந்து கிடக்கிறபால் அது பாலா?—வெள்ளைத் தண்ணீரா? என்று விகடன் கேட்கிறேன்! அந்த வெள்ளைத் தண்ணியிலே முக்கால் பாகம் வரையில் டம்ளரிலே ஊற்றி மூலதேவதையான காபியைத் தனியாகவே வைத்திருந்து அதிலே இரண்டொரு துளிகள் விட்டு அத்துடன் அஷ்டதரித்திரச் சர்க்கரையில் இரண்டு கரண்டியைக் கொட்டி காபிஹோட்டல் தேவதைகள் கையை உயரத் தூக்கி நீட்டிக் காபியை ஆற்றிக் கொடுக்கிற அழகும் மயக்கும் பாத நாட்டியம் ஆடுகிற பருவரதிகளுக்குங்கூட வராதப்பா!

ஃ

இனி பக்ஷணங்களோ! அது ஒரு கண்ணராவி! நேற்று மிச்சப்பட்ட வடை, பாசிப்போனவைகளெல்லாம் இன்று பக்கோடாக்களாக மாற்றப்பட்டுத் தயாராகிவிடுமாம்! ஒரு வாய்க்குள்போகிற ஹல்வாவுக்கு ஒரு தட்டு வேறே! ஒரு கரண்டி வேறே! அதை ஒரு மணிநேரம் என்னூரு சாமிகள் நக்கி நக்கி ருசி பார்க்கிற சிங்காரம் வேறே! ஒரு எச்சில் தட்டிலே இரண்டுஇட்டிலியைபோட்டு அதற்கு மேலே நாலங்குல உயரத்திற்குத் தண்ணீர் சாம்பார் விட்டுக்கொண்டு வந்து வைக்கும்போது இட்டிலியைப் பாதாளத்திலே தேடவேண்டியதாகி, அதைப் பார்க்கவே வாந்தியும் வருகிறது! இதிலே முதல் தடவை மட்டும் சாம்பாரோ, மண்ணே எதுவோ தாராளமாக வருகிறது! அப்பால் மிச்சம் இருக்கிற தோசை இட்டிலிக்குச்

---

ஒரே ஆசிரியர் இரண்டுவித அபிப்பிராயத்தையும் தழுவி தனித்தனியே இடத்துக்குத் தகுந்தபடி எழுதுகிறுர். அதன் நோக்கமென்ன? இரண்டுவித அபிப்பிராயமுடையவர்களும் தன் பத்திரிகைய ஆதரிப்பதற்குத் தானே?

சாம்பாரோ மற்றதுவோ கொண்டு வரும்படி கேட்டால் காபிஹோட்டல் சாமிகளுக்கு அது காதில் விழுவதே யில்லை! ஆயிரம் முறை கூவினும் முறைத்துப் பார்ப்பதே யொழிய, கண்டுங் காணாததுபோல் போய்விடு வதே தவிர வந்து ஊற்றுவதே யில்லை! ஊற்றினாலும் கால் அரைக் கரண்டியைக் காட்டி விட்டுப் போய் விடுகிறது! இதிலே பூணூல் இட்டிலி அரையணா! பூணூல் இல்லாத பார்ப் பனரல்லாதார் இட்டிலி அதைவிடப் பெரியதாகக் காலணா! பூணூல் எறி யதும் காலணா அரையணா வாகிவிடு கிறதாக்கும்! இனி பக்ஷணங்களின் சங்கதியோ வெகு தமாஷ்! எடுக்கப் போகிற கை பெரிய கையாகவே தோற்றும்! காகிதப் பொட்டணத்துக் குள் வந்த பக்கோடா காராப்பூந்தி களோ கடுகத்தனை தான் இருக்கும்! அதைப் பார்க்கும்போதே வயிறு எரி யும்! காசு கொடுத்து வாங்கினதாகக் காணோம்! சும்மா தர்மத்திற்குத் தந் ததுபோலத் தான்! ஃ

எல்லாச் சாமான்களும் விலை இறங்கி நயமாய் விட்ட இந்நாளிலே கூட காபிஹோட்டல் தம்பிரான்கள் பழய கையாகவே விற்று 100—க்கு 200-வீதம் லாபம் கொண்டு போகி றார்கள்! ஊரார் பழிக்காம லிருப்பதற் காக அரையணா இட்டிலியைக் காலணா இட்டிலியாக ஆக்கியிருக்கிற தளுக்கு மயக்கை விகடன் என் னென்று சொல்வேன்! முன்பு அரை யணாவுக்கு விற்ற பெரிதும் சிறிது மான தளுக்கு மயக்கு இட்டிலியிலே பாதிகூட இப்போதைய காலணா இட்டிலியி லில்லை! இது ஒரு சமர்த் துத் தந்திரமாக்கும்! கோதுமை ரவை பாதிக்குப் பாதிவிலையில் வந்து விட்டிருக்க, ரவாதோசை பழய விலை யிலேதான் இருக்கிறது! அப்படியே காபி—பக்ஷணங்கள் முதலியனவும் பழய கணக்கில்தான் இருக்கின்றன! இந்தப் பகிரங்க மோச அக்கிரம அநி யாய விபரீதத்தைச் சகித்துக் கொண்டு கள்ளுக்கடை மறியல், சீமைத்துணி மறியல் என்று புறப்படு கிற என்னுருதலைவர்களென்கிற குட் டித் தெய்வங்களைப் பார்த்து விகடன் சிரிப்பாய்ச் சிரிக்கிறேன்! ஏன் இந்தக் காபிஹோட்டல்களின் அநியாயங் களுக்கு மறியல் செய்யக் கூடாதோ? இதிலே என்னுரு காங்கிரஸ் தெய் வங்கள் நுழையாதது அவர்களும் வேளை தவறாத காபி டீ வயிறுதாரிக ளாயிருப்பதாலோ என்னவோ! ஏதோ ஒரு சின்னரகசியம் இதில் இருக்குது! இருக்குது!! ஃ

தாசி ஸர்வாபரண பூஷிதையா யிருந்தால் அவளை அண்டுகிறவனுக்கு அந்த ஆபரணங்களால் ஏதாவது பய னுண்டா? அது எதிர்ப்படுபவனை மயக்குகிற ஒரு தளுக்கு வித்தை தானே! அப்படியே காபி ஹோட்டல் கள் கண்ணாடிகளாலும், படங்களா லும், காந்த விளக்குகளாலும் அலங் கரிக்கப் பட்டிருந்தால் அங்கு வந்து உண்ணுபவனுக்கு அவற்றால் ஆகிற லாபம் ஒன்று மில்லையே! அவன் வாய்க்குக் கிட்டியதில் ஏதேனும் அதிகமாக வைத்திருந்தால் அதுதான் அவனுக்கு லாபமாகும்! அந்த வாய்க்கு வருகிற சங்கதி கடுகத்தனையாயும் எச் சில் சொட்டையாயும் இருக்கையில், இந்தப் படங்களும் கண்ணாடிகளும் தாசி நகைகளைப்போல மயக்குவதற்

---

ஒருவர் செய்யும் காரியத்தைப் பார்த்து மற்றவர்களும் காபியடிக்கத் தொடங்குவதே இக்காலத்தில் அதிகமாகிக்கொண்டு வருகிறது. தன் சுய புத்தியினுல் யூகித்துப் புதிதாய் ஒன்றைச் செய்யக் காணோம்.

குச் செய்கிற தனுக்குச் சங்கதியே தவிர வேறில்லை! காபி காபி என்பதெல்லாம் வெறும் வெள்ளை வேன்னீரே! காபியின் ருசு ஆறினாலோ அறுபது வயதுக் கிழவியின் அழகு தான்! ஃ

இதுபோக, இன்னொரு அவிவேக ஆபாஸ மூட்டையையும் விகடன் அவிழ்த்து விடுகிறேன்! நோன்பு விரத நாட்களிலே அசுத்த மில்லாமல் சுத்தமாய் உண்பதற்காகப் பலர் காபி ஹோட்டலுக்குப் போகிறார்கள்! அங்கே இருக்கிற ஆபாஸ அனுசாரங்களை இவர்கள் சிந்தித்தார்களா? காபி ஹோட்டல் பார்ப்பனசாமி ஸ்நானம் செய்து இட்டிலி தோசை பலகாரங்களைச் சுட்டதா? 100-க்கு 90—இல்லவே யில்லை! அந்தக் காபி ஹோட்டல்சாமி இன்னும் பல்லுகூட விளக்கவேயில்லை. வாயில் புகையிலை நாற்றம் அப்படியே அழுகிக் கிடக்கிறது! நேற்று கட்டிய வேஷ்டி அழுக்கு பிடித்து நாறியபடியே இருக்கிறது! உள்ளுக்கு வேலை செய்கிற சின்ன ஊழியச் சாமிகளோ இன்னும் இதை விடஅதிக ஆபாசம்! எந்தச் சாமிகளும் குளித்து நீராடியதாகக் காணோம்! நேற்றும் அதற்கு முந்தியும் இருந்த இட்டிலி தோசை மாவுடன் கலந்த புதுமாவிலேயேஎல்லாம் சுடப்பட்டுத் தயாராகின்றன! இந்த அவலக்ஷண விபரீத ஆபாஸத்திலே தங்களின் நோன்புவிரத நாட்களின் பரிசுத்தத்தைக் காண்பித்துக் கொள்ள— "நாங்கள் காபி ஹோட்டலுக்குப் போய் சுசிகரமாய்ச் சாப்பிட்டுக்கொள்ளுறோம்"—என்று ஜம்பம் பேசிக்கொண்டு உண்ணப்போகிற புண்ணியாத்மாக்கள் என்ன பரிசுத்தமான புண்ணியத்தைக் கட்டிக் கொள்ளுகிறார்களோ விகடனுக்குத் தெரியவில்லை! அவர்களின் விரத நோன்புப் புண்ணியங்கள் இந்தக் காபி ஹோட்டலின் அனுசாரப் புசிப்பால் எப்படித்தான் காப்பாற்றப் படுகின்றனவோ அதுவும் ஆண்டவனுக்கே வெளிச்சம்! விரத நாட்களில் தங்கள் வீடுகளில் குளித்து ஸ்நானம் செய்து மெழுகிய பரிசுத்தமான இடத்தில் சுத்தமாய்த் தேய்த்துக் கழுவிய பாத்திரங்களை உபயோகித்துச் சிற்றுண்டி வகைகளை சுசிகரமாகச் செய்து உண்பதுதான் நியாயமும் தர்மமும் விரதங் காக்கும் கிரமமுமாகும். வீட்டில் செய்து கொள்ள இயலாதவர்கள் பால் பழத்துடன் (ஹோட்டலின் எருமைத் தண்ணீர்பால் அல்ல) நின்றுமத்யான காலத்தில் வீட்டில் அன்னம் புசிப்பது தான் ஒழுங்காகும். இதைவிட்டு விரத நாட்களில் காபி ஹோட்டலில் குளித்து முழுகி நீராடாது தயாரித்தவற்றை யுண்டு, எச்சில் பாத்திரங்களைத் தொட்டுப் பருகி விரதம் விரதம் என்று உளறுகிற பைத்தியத்தை இனியேனும் விட்டொழிப்பார்களா வென்று விகடன் கேட்கிறேன்! விரத நோன்புகளை ஆசரிக்கும் உத்தமப் பிராமணசீலர்களுக்கும் கூடவே தான் விகடன் இதைச் சொல்லுகிறேன்! ஃ

இனி, இன்னொரு வேடிக்கை! விரத நோன்பு நாளில் பிராமணரல்லாதார்கள், அந்த அல்லாதவர்கள் சுடுகிற இட்டிலி தோசைகளைக் காலையில் தின்னலாகாதாம்! ஏனெனில், அவர்கள் குளித்து ஸ்நானம் செய்து சுட

---

டாக்டர் அன்னிபெஸண்டு அம்மையார்போல் எதிலும் அகப்பட்டுக் கொள்ளாமல் பொதுவில் பெரிய அந்தஸ்துடன் பெருமைபெறும் சில தலைவர்களும் நமது பக்கத்தில் இல்லாமலில்லை.

வில்லையாம்! இப்படி அவர்களைப் பழிப்பவர்கள் அவர்களிலும் அதிக ஆபாஸமாய் ஊர் எச்சிலெல்லாம் சேர்ந்துள்ள காபி ஹோட்டலைமட்டும் மகா பரிசுத்தபுண்ணிய ஸ்தலங்களாக எப்படித்தான் நினைக்கிறார்களோ வென்ன விகடன் கைகொட்டிச் சிரிக்கிறேன்! இதிலே இன்னொரு புதுமை! காலையில் அல்லாதாரின் தோசை இட்டிலி உண்ணலாகாதென்ற பார்ப்பனரல்லாத விரதச்சாமிகள் இரவிலே அந்த அல்லாதார் சுடுகிற இட்டிலி தோசைகளை வேண்டியமட்டும் வாங்கி வயிற்றில் தள்ளுகிறார்கள்! காலையில் உண்ணக்கூடாதாம்! இரவிலே உண்ணலாமாம்! என்னென்ன விகட சாஸ்திர மாமூல்களப்பா! ஃ

கடைசியாக விகடன் காபிஹோட்டல் வேடிக்கைகளைப்பற்றியும் கொஞ்சம்சொல்லிமுடித்துவிடுகிறேன்! காபி ஹோட்டலில் ஒருவர் சாப்பிட்டுக் கொண்டிருக்கையில் அவருக்குத் தெரிந்த ஒருவர் வந்துவிட்டால் கண்டும் காணாததுபோல் இருந்துவிடுகிறார்! பிறகு வந்தவர் தாம் இட்டிலி காபி கேட்டு உண்ணத்தொடங்கிய பின்பு முதலில் புசித்துக்கொண்டிருந்தவர் இவருடன் பேச ஆரம்பித்து 'என்ன பிரதர் சுகமா' என்கிறார்! இப்படி முதலிலேயே விசாரிக்க ஆரம்பித்திருந்தால், தானே அவருக்கு சப்ளை செய்யவேண்டியிருக்கும் என்பதே! அந்தச் செலவைத் தானே கொடுக்கும்படி நேரிட்டுவிடுமாம்! ஒருவர் காபி ஹோட்டலுக்குப் போகிற நேரம் பார்த்து அவருடன் சென்று தானும் குடித்து மெதுவாக நழுவிவிடுவது சிலருடைய தந்திரம்! தங்களுக்குக் காரியம் ஆகவேண்டியிருந்து அதற்காகக் காபி வாங்கி ஊற்றுவதும் உண்டு! பாத்திரங்களில் பாதி வாய்க்குள் போய்விடுகிற அழகு சிங்காரங்கள் வேறே! கேட்காதிருக்கும்போதே மடமடவென்று அவருக்கும் இவருக்கும் கொண்டுவந்து வைத்து, கடைசியில் ஒருரூபாய்க்குக் கணக்குபோட்டுப் பணம் வசூலிப்பதும் வேறே! அழுதுகொண்டு அந்த ரூபாயைத் தொலைப்போரும் வெகு பேர்! முதல் நாற்காலியில் ஈசிப் சேட் உட்கார, பக்கத்து நாற்காலியின் ஸ்வாமி கைங்கரியம் ஸ்ரீநிவாஸ ரங்காச்சாரி வந்து அமர, அவருக்குப் பக்கத்தில் மரியாகுசைப்பிள்ளை வீற்றிருக்க, அதற்கு அடுத்த பக்கத்தில் மதார்சா ராவுத்தரும், அப்துல் ரஹீமும் உட்கார்ந்து காலாட்ட, எதிரே ஆதிதிராவிடர் அங்கமுத்து நாற்காலியில் சாய, எல்லோருமாக ஒன்றாய் இனமல் தட்டில் நக்கிச் சாப்பிட்டுக் கரண்டியால் நன்றாக ருசி பார்க்கிற ஆபாஸத்தை எங்குபோய்ச் சொல்லியழுவதோ! ஐயோ! ஆண்டவனே! விரதநாளில் இந்த அனாசாரமான ஹோட்டல்களை நினைத்தாலே நெஞ்சிலுள்ள பரிசுத்தம் பாழ்பட்டுப்போமே! இவற்றிலும் இரண்டொன்று சுசிகரமாய், விரத நோன்பு யோக்கியத்திற்குரியதாய் எங்கேயோ இருக்கலாம் தான். அப்படிச் சுசிகரமாயிருப்பவைகளைப்பற்றி விகடன் பேசவேயில்லை! மொத்தத்துக்கு 100-க்கு 90 ஆபாசம்தான்! பிழைக்கிற வழிதான்! காபிஹோட்டல் என்கிற பகிரங்கக் கள்ளுக்கடைக்குச் செல்லும் வழக்கத்தை உங்கள் மக்களுக்கு உண்டாக்கிவிடாதீர்கள்! இன்னுமுள்ள கசுமாலங்களைக் குறித்து என் நஞ்சான் குஞ்சான்கள் நன்றாக அறிந்தவர்களேயானதால்விகடன் இவ்வளவுடன் நிறுத்திக்கொள்கிறேன்! ராம்! ராம்! சுபம்! சு!! சுவாஹா!!!

---

விவாகத்துக்கு வந்தவர்கள் சந்தோஷத்துடன் புறப்படாமல் கண்ணீருடன் கலகத்தோடு புறப்பட்டால், அந்த விவாகத்தின் முக்கியஸ்தர்களும் பிறகு கண்ணீர்விட வருமாம்!



தண்ணீர்த் தொட்டியாகிய ஆடவர் கூட்டத்தின் இடையில் சக்கரையாலான பொம்மையாகிய பெண் அதிகம் நெருங்கினால் என்ன ஆகுமென்று ஒருவர் கேட்கிறார்!

ஃ

ஒருவனுடைய வரும்படி எவ்வளவென்பது அவன் போனபிறகு தான் தெரியுமாம்! ஃ

பத்தாவது தடவையாகக் கல்யாணம் செய்து கொண்ட ஓர் அமெரிக்க மாது, முன்புநீக்கிவிட்ட கணவனையே மறுபடியும் மணந்தாளாம்!

ஃ

காபி குடித்த வாழ்விலிருந்து பழஞ்சோறு உண்ணும் வாழ்வுக்குத் திரும்பியவர்கள் எத்தனைபேரென்று விகட சித்தர் வினவுகிறார்!

ஃ

எல்லாம் நம்வீட்டில் இரவல் கேட்க வருவார்களே தவிர, நாம் மற்றவர்களின் வீட்டில் ஒரு நெருப்புக்குச்சி கேட்டாலும் கிடைக்காதாம்!

ஃ

ஏமாறிய கட்டையிடம் தான் அதிக உறவு பிடிப்பதாம். தங்களின் கபடங்களை நன்றாகத் தெரிந்தவர்களிடம் அதிகம் சேருவதில்லையாம்!

ஃ

உள்ளுக்குப் பகையுள்ள இடத்தில் எவ்வளவு ஒட்டி நின்றாலும் அவர்கள் ஒன்று சேரமாட்டார்களாம்!

அனுபவிக்கவும் என்னால் முடியவில்லை, அனுபவிக்கக் கூடியவர்களுக்கும் கொடுக்க மனமுமில்லையென்று ஒருவர் புலம்புகிறார்!

ஃ

அந்தப் பக்கமும் இந்தப் பக்கமும் வேளைக்குத் தகுந்தபடி பேசுகிறவர்களையே மறுபடியும் தேடிப்போகத் தலைவிதி வாய்க்கிறதாம்!

ஃ

பெண்டாட்டி வீட்டிலிருந்தாலும் தொல்லை, அவள் இல்லாமல் வெளியிற் சென்றிருந்தாலும் தொல்லை என்று ஒருவர் கூறுகிறார்!

ஃ

தன் வீட்டிற்கு வந்தவர்களை உடனே புறப்பட்டுப் போகச் செய்வதற்கு, அவர்களை முன்பின் தெரியாததுபோல் காண்பித்துக்கொண்டால் போதுமாம்! ஃ

என் மாமியார் உன் வீட்டிற்கு வந்தபோது ஏன் கவனிக்கவில்லையென்று ஒருவன் கேட்க, அதற்கு மற்றவன் உனக்குப் பெண் தந்தது போல் எனக்கும் பெண் தந்திருக்கிறாளா நான் கவனிக்க என்று பதில் சொன்னானாம்! ஃ

அதிகமான குயுக்தி, வஞ்சகம், பொறாமை இவற்றோடு அதிகப்பட்ட இகழ்ச்சியும் தரித்திரமும் கூடிக்கொள்ளுமாம்! ஃ

அதிகமாகப் படித்தவர்களிடம் அதிகமாக உறவு நேசம் பிடிக்கக் கபடகுணத்தால் முடியாதாம்!

ஃ

குடித்தன வாழ்வு சீர்பட்டுப் பணம் கையில் நிற்பதற்கு இன்னும் சில காபிஹோட்டல்கள் புதிதாக ஏற்பட வேண்டுமாம்!

# "அமிர்த குணபோதினி"

## பிரஜோத்பத்தி வருஷத்திய ஆனி மாத பஞ்சாங்கம்.

| யோகம் | இங் | தமிழ் | வார | திதி, நக்ஷத்திரம், விரதாதிகள் முதலியவை. |
|---|---|---|---|---|
| அ | 15 ஜூன் (5-28) | 1 | தி | சசி 8-32, ரோ31-13, கரிநாள், அமாதர்ப்பணம், ஷடசீதி. |
| சி-ம | 16 | 2 | செ | ● 6-45, மிரு 30-42. |
| சி | 17 | 3 | பு | பிர 3-37, உப 56-5, ஆரு 29-1, அதிக ஆஷாட சுத்கம், சந்திர தரிசனம். |
| அ | 18 | 4 | வி | திரி 54-45, புந 26-25. |
| உ-ம | 19 | 5 | வெ | சது 49-47, பூச 23-17 |
| ம-அ | 20 | 6 | ச | பஞ் 43-59, ஆயி 19-51, கரிநாள். |
| ம-சி | 21 | 7 | ஞா | ஷஷ் 38-34, மக 16-16, சீவரம் கருடன், சிதம்பரம் ஆவுடையார் கோயில் ரதம், ஷஷ்டி விரதம். |
| சி | 22 | 8 | தி | ஸப் 32-56, பூர 12-42, ஆனி திருமஞ்சனம், கடகாயனம் 22-58 |
| அ-சி | 23 | 9 | செ | அஷ் 27-37, உத் 9-16 |
| ம-சி | 24 | 10 | பு | நவ 22-29, ஹஸ் 6-5, திதிதுவயம், காமேஸ்வரவிரதம் |
| சி-அ | 25 | 11 | வி | தச 17-40, சித் 3-6, ஆனி கருடன், ஸ்ரீவில்லிபுத்தூர் தீர்த்தம் |
| சி | 26 | 12 | வெ | ஏகா 13-8, ஸ்வா 0-28, உ.ப 57-45, திருவல்லிக்கேணி அழகியசிங்கர் கருடன், ஸ்ரீமுஷ்ணம் ஜ்யேஷ்டாபிஷேகம் |
| சி | 27 | 13 | ச | துவா 9-4, அநு 56-33, சனிப்பிரதோஷம் |
| ம-அ | 28 | 14 | ஞா | திர5-39, கேட்55-40, கோயம்பேடு-களத்தூர்-கருடன், ஜ்யேஷ்டாபிஷேகம் |
| சி-உ | 29 | 15 | தி | சசி 2-59, மூல 55-42, மன்னார்குடி தெப்பம் |
| சி-பி | 30 | 16 | செ | ○ 1-18, பூரா56-58, சைதாபேட்டை பிரசன்ன வெங்கட நரஸிம்மர் ரதம் |
| அ-சி | 1 ஜூலை | 17 | பு | பிர 0-54, உரா 59-35 |
| சி | 2 | 18 | வி | துவி 1-51, ஶ்ரவ 60-0 |
| ம-சி | 3 | 19 | வெ | திரி 4-18, ஶ்ரவ 3-53, சங்கஷ்ட சதுர்த்தி |
| சி-அ | 4 | 20 | ச | சது 8-16, துவி 9-7 |
| சி | 5 | 21 | ஞா | பஞ் 13-25, சத15-47 |
| சி | 6 | 22 | தி | ஷஷ் 19-24 பூட்23-17 |
| அ-சி | 7 | 23 | செ | ஸப் 25-44, உட் 30-53 |
| உ-ம | 8 | 24 | பு | அஷ் 31-37, ரே 38-15 |
| அ-சி | 9 | 25 | வி | நவ 36-32, அசு 44-29 |
| சி | 10 | 26 | வெ | தச 39-53, பர 49-12 |
| சி | 11 | 27 | ச | ஏகா 41-25, கிரு 52-8, ஸர்வைகாதசி, கிருத்திகை |
| சி | 12 | 28 | ஞா | துவா 46-34, ரோ 52-59 |
| அ-சி | 13 | 29 | தி | திர 38-11, மிரு 51-59, பிரதோஷம், சிவாராத்திரி |
| ம-சி | 14 | 30 | செ | சசி 35-2, ஆரு 50-8, கிருஷ்ணாங்காரக சதுர்தசி |
| சி | 15 | 31 | பு | ● 29-50, புந 46-38, ஆனி அமாவாசை, திருவள்ளூர் தெப்பம். |

| ரா | | சுக் | ரவிபுத |
|---|---|---|---|
| | 15உக்கு ராசி. | | குரு |
| | | | குஜ |
| சனி | | | கே |

"அமிர்த குணபோதினி" பிரஸ், 302, தங்கசாலைத் தெரு, சென்னை, 1931.